இது ஒரு புதிய குறுநாவலில் கடந்து வந்த எனது சில நினைவுகள் உங்கள் அலசலுக்கு...

# இ.தியாகலிங்கம்

சுயவெளியீடு
உதவி
**lulu.com**

**IRANDAKAN**

**(A new short novel from Norway)**

**First Edition**
**December 2019**
ISBN: 978-0-244-54705-9

**Publication Editor**
**R.Thiagalingam**
**Vetlandsveien 117**
**0686 Oslo**
**Norway**

**Pages: 83**

**Printed & Published by**
**Lulu.com**

**எனதுரை**

தியாகிகள், துரோகிகள் என்பது இன்றும் வாதப் பொருளாய்த் தொடரும் எமது சமுகத்தில் இனியாவது அதற்கான அர்த்தத்தைக் கண்டு கொள்வார்களா என்னும் ஏக்கத்தோடு இருக்கும் எமது உறவுகளுக்கு, இது அலசலுக்கான, என் உந்து சக்தியும், சமர்ப்பணமும்.

அன்புடன்

இ. தியாகலிங்கம்

# 1.

பிரவேசம்

அந்த மஞ்சள்நிறப் பாரவூர்தி அலுவலகத்திற்கு முன்பு கொழுத்த எருமை போல வந்து நின்றது. அந்தக் கட்டடம் தீப்பெட்டிகளை அடுக்கியது போன்ற இரண்டுமாடிக் கட்டடம். நீண்ட காலம் எண்ணைத் தேய்த்துக் குளிக்காதவர் தோல் போலப் பரட்டை அடித்து வெடிப்பு விழுந்த சுவர்கள். அது அதன் சொந்தக்காரருக்குக் காசு வந்தால் போதும் கட்டடத்தைக் கவனிப்பான் ஏன் என்பது போன்ற எண்ணம் இருப்பதான காட்சி. அதன் கீழ்த்தளத்தில் நடைமுறை அலுவலகங்களும் மேலே செயலதிபரின் அலுவலகம் ஒன்றும் இருந்தது. அதைவிட வெறுமையாக இருந்த இடங்களில் அங்கங்கே பலர் தங்குவதும் போவதுமாகப் பரபரப்பாய் இருந்தனர். அங்கேயே இவர்களும் நின்றார்கள். இவர்களை ஏற்கனவே விசாரித்துப் படிவங்கள் நிரப்பிப் பின்பு அசையும் சொத்துக்களாய் பாய், பாத்திரம், சீருடை, பாதணிகள் என்பன கணக்குப் பார்த்து வழங்கித் தயார் நிலையில் வைத்திருந்தார்கள்.

அந்தப் பாரவூர்தியில் இருந்து இறங்கிய இருவர் அவசரமாக அலுவலகத்திற்கு உள்ளே வந்தார்கள். அவர்களில் ஒருவர் கறுப்பாக, உயரமாக இருந்தார். அவருக்கு ஐயனாரைப் போன்ற அருவாள் மீசை. அது முகத்தில் குற்றிட்டு நின்றது. அவருக்கு அது கம்பீரத்தைவிடப் பயத்தை அதிகம் தருவதாய் இருந்தது. கம்பியின் தடிப்பில் முறுக்கு முறுக்காகச் சுருண்ட தலைமுடி. பழுக்கக் காய்ச்சிப் பளபளக்கும் இரும்பாகச் சிவந்த கண்கள். மொத்தத்தில் அவர் மிகுந்த கோபக்காரர் போலத் தோன்றினார். மற்றவர் மிகவும் சாந்தமான முகத்தைக் கொண்டவர். அவர் மாநிறம். அதிராது மிகவும் மென்மையாகப் பேசினார். அந்த இருவரும் உள்ளே சென்று அலுவலகத்தின் முன் உள்ள அறைக்குள் வேகமாகப் புகுந்தார்கள். பின்பு ஏற்கனவே அங்கு இருந்தவர்களோடு ஏதோ கதைத்தார்கள்.

அந்தப் பாரவூர்தியில் ஏற்கனவே நிறையப் பொருட்கள் இருந்தன. அலுவலகத்திலிருந்து மேற்கொண்டு பொருட்கள் அதில் ஏற்றப்பட்டன. மூட்டை மூட்டையாக ஏற்றப்பட அதற்குள் என்ன இருக்கிறது என்பது கண்ணனுக்குத் தெரியாது. அதற்கான அவசியமும் அவனிடம் இல்லை என்பது கண்ணனுக்கு விளங்கியது.

அலுவலகத்திற்குள் இருந்தவர்கள் ஒரு பட்டியலை வந்தவர்களிடம் கொடுத்தார்கள். அந்த நபர்கள் அதைக் கவனமாக வாசித்தார்கள். பின்பு எண்ணிப் பார்த்துவிட்டு வெளியே வந்தார்கள்.

காலைச் சாப்பாடாக வழங்கப்பட்ட இட்லியை ஆர்வத்தோடு இவர்கள் உண்ணும் போது,

'பி காம் போகிறவை கெதியா வந்து லொறியில ஏறுங்கோ' என்கின்ற சத்தம் ஒலிபெருக்கியில் கத்துவது போலக் கேட்டது. சாப்பிட்டுக்கொண்டு இருந்தவர்கள் முதலில் அதிர்ந்து போய்விட்டார்கள். அதற்கு மேல் அவர்களால் அதைச் சுவைத்துச் சாப்பிட நேரமும் விருப்பமும் இருக்கவில்லை. அவதி அவதியாக அள்ளி அதக்கிவிட்டு கையைக் கழுவிக் கொண்டு பாரவூர்திக்குப் பின்னே தமது சொத்துக்கள் உடன் வந்து நின்றார்கள். அவர்களைப் பார்த்து அந்தச் சுருள் முடி மனிதர் பட்டியலிட்டுக் கொடுக்கப்பட்ட பெயரையும் அவர்களுக்கு அதில் கொடுக்கப்பட்டு இருந்த எண்ணையும் வாசிக்கத் தொடங்கினார். அதில் தானும் ஒரு சிப்பாய் என்று காட்டும் அவஸ்தை இருப்பதைப் பார்க்க முடிந்தது. அதைப் பார்த்துச் சிலர் மனதிற்குள் சிரித்துக்கொண்டனர். அந்த விபரங்கள் ஏற்கனவே பதியப்பட்டு அதைப் பற்றி விரிவாக அலுவலகத்தில் கூறியிருந்தார்கள். இயக்கத்தில் சொந்தப் பெயர்கள் பாவிப்பதில்லை என்றும் அதற்குப் பதிலாக ஒரு புனை பெயரைக் கட்டாயம் பாவிக்க வேண்டும் என்றும் ஏற்கனவே கூறி அதை மாற்றிப் பாவிக்கத் தொடங்கி இருந்தாலும் இந்த எண் பழக்கப்பட்டது அல்ல. கண்ணனுக்கு இராணுவத்தில் அல்லது சிறையில் பெயருக்குப் பதிலாக அதைப் பாவிப்பார்கள் என்று தெரியும். அப்படியே இங்கும் பாவிக்கிறார்கள் என்பது விளங்கியது. அப்படி என்றால் இதுவும் ஒரு முழுமையான இராணுவம் போன்றதே என்கின்ற எண்ணம் கண்ணன் மனதில் உருவானது.

வண்டிக்குள் நிறையப் பொருட்கள் இருந்தன. அதற்கு மேல் ஏறி இருந்தே பயணம் செய்ய வேண்டும் என்பதும் விளங்கியது.

அந்தச் சுருள் முடிக்காரர் எண்ணையும், பெயரையும் ஒலிபெருக்கியின் குரலில் வாசித்ததன்படி எல்லோரும் எழுந்து ஆர்வத்தோடு வந்து ஏறுவதற்குத் தயாரானார்கள். இவர்கள் ஆர்வத்தைப் பார்த்த அந்தச் சுருள் முடிக்காரர் இவர்களைப் பார்த்து புன்முறுவல் செய்தார். அவர் முகத்தில் மலர்ந்த புன்முறுவல் எல்லோருக்கும் அதிசயத்தைத் தந்தது. அவர் அப்படிச் செய்ததின் அர்த்தம் என்ன என்று கண்ணனுக்கு விளங்கவில்லை. கல்லுக்குள் நிறைந்து மறைந்து இருந்த ஈரமா என்றும் அது விளங்கவில்லை. என்றாலும் அதை யாரிடமும் இப்போது கேட்க முடியாது என்பது திண்ணமாக விளங்கியதால் பேசாது ஏறும் இளைஞர்களோடு சேர்ந்து தானும் பாரவூர்தியில் ஏறத் தயாரானான். அப்போது பின்னே நின்ற சுமன்,

'என்ன கண்ணன் யோசிக்கிறா? பயப்பிடுகிறாய் போல...?' என்று கேட்டான்.

'அங்... நான் ஏன் பயப்பிட வேணும்? உண்மையில பரபரப்பாய் இருக்குது. அவ்வளவுதான். பயப்பிட வேண்டிய எந்த அவசியமும் இல்லை. முகாமைப் பார்க்க ஆசையா இருக்குது'

'சரி சரி... அது எண்டா உண்மைதான். எண்டாலும் சில வேளை வீட்டில இருந்தளவுக்குச் சொகுசா இங்க இருக்க முடியாமல் இருக்கும். அதை நாங்கள் சமாளிக்கத்தான் வேணும். எனக்கு அது பெரிய பிரச்சனையா இருக்காது எண்டு நினைக்கிறன். ஊரில ஆமிக்குப் பயந்து, பயந்து மரவள்ளித் தோட்டத்துக்கையும், பாவைப் பந்தலுக்குள்ளையும், உயிரைக் கையில பிடிச்சுக் கொண்டு கிடந்த அவஸ்தைக்கு இங்க அவசியம் இல்லைத்தானே? இதுவே பெரிய சுதந்திரம் கிடைச்ச மாதிரி. பயமற்ற ஒரு சூழல். இவ்வளவும் இருக்கிறதால நாங்கள் இங்க எதுக்கும் கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை'

'உள்ளுக்காப் போங்கோ... உள்ளுக்காப் போங்கோ...' என்று மீசைக்காரர் ஒலிபெருக்கியின் குரலில் திடீரெனக் கத்தினார். அதை அடுத்துப் பலரும் நினைவு வந்தவர்களாக முன்னே நகர்ந்தனர். கண்ணனும், சுமனும் தங்களது கதைக்கு ஒரு இடைவெளி விட்டு இடைவெளி உள்ள இடமாகப் பார்த்து முன்னோக்கிச் சென்றார்கள்.

பாரவூர்தி மெதுவாக அந்தச் சந்தைவிட்டுப் பிரிய மனது இல்லாது பிரியாவிடை கொடுத்துப் பின்பு முன்னோக்கி நகரந்தது. அலுவலகம் இருந்த இடம் செழிப்பான இடம் போலக் கண்ணனுக்குத் தோன்றியது. அதை அங்கிருந்த வீடுகளிலும் அதைச்சுற்றிய அமைப்புக்களிலும் வெளிப்படையாகப் பார்க்க முடிந்தது. அது செழுமையான மரங்களும், கொடிகளும் நிறைந்த பகுதியாகப் பூத்துக் குலுங்குவதையும் அவன் கவனித்தான். வாகனம் ஒருவாறு நகர்ந்து பிரதான பாதையை அடைந்தது. அந்த நகரம் யாழ்ப்பாணத்தைவிட மிகச் சிறிய நகரமாகவே கண்ணனுக்குத் தோன்றியது. சில கடைகள். சில கட்டடங்கள். வருங்காலத்தில் இதன் தோற்றம் மாறலாம் எனக் கண்ணன் எண்ணினான். வாகனத்தில் இருந்தவர்கள் எல்லோரும் பேச்சு இழந்து நகரைப் புதினம் பார்ப்பதில் ஆர்வம் காட்டினர். அந்த அமைதி கண்ணனுக்கும் தேவைப்பட்டது. அந்த நகரத்தை இரசிக்கத் தொடங்கினான். ஆனால் அது அதிக நேரம் நீடிக்கவில்லை. சிறிது நேரத்திலேயே கட்டடங்கள் கழிந்து வயல்வெளி வரத் தொடங்கியது. சிறிது நேரம் சாலைவழியாகச் சென்ற வாகனத்திலிருந்து அனைவரும் இடங்களைப் பராக்கு பார்த்துக் கொண்டு வந்தார்கள். பிரதான பாதையால் சென்ற வாகனம் திடீரென சவுக்கம் தோப்புக்களை ஊடறுத்துச் செல்லும் பாதை வழியே இறங்கியது.
சவுக்கம் தோப்புக்கள் இவ்வளவு விஸ்தீரணமாய் இருக்கும் என்று கண்ணனோ, சுமனோ எதிர்பார்க்கவில்லை. இங்கு இருக்கும் சவுக்கு மரத்தின் தேவை அவர்களை மலைக்க வைத்தது. அந்த மலைப்போடு வாகனத்திலேயே அந்தத் தோற்றத்தைக் கடந்து செல்லப் பல நிமிடங்கள் பிடித்தன. அதன் பாதை சுற்றிச் சுற்றித் திரும்பிப் போகும் வழியை ஞாபகம் வைத்திருக்க முடியாதவாறு தலை சுற்றப் பண்ணியது. கண்ணுக்கு எட்டிய துரம் வரைக்கும் சவுக்கம் தோப்புகள் கடல் போல எல்லை அற்றுத் தெரிவதை வாகனத்திலிருந்து பார்க்கப் பார்க்க மலைப்பு மாறாது தொடர்ந்தது. இந்தப் பச்சைக் கடலுக்குள் எங்கே முகாம் இருக்கிறது என்று பலரும் ஆர்வத்தோடு தேடினார்கள். முதலில் அவர்கள் கண்ணிற்கு அது புலப்படா விட்டாலும் சிறிது நேரத்தில் உயரப் பறந்த கழகத்தின் கொடி அதைக் காட்டிக் கொடுக்கப் பலரும் ஆர்வமாக அங்கே பார்த்தார்கள்.

வேகமாகச் சென்ற வாகனம் மெதுவாகத் தனது வேகத்தைக் குறைத்தது. அப்போது கண்ணனால் அங்கே ஒரு தடை இருப்பதைக் கவனிக்க முடிந்தது. அது காவல் அரண் போல் இருந்தது. அத்தோடு சிறிய கோபுரம் ஒன்றும் அதற்கு அருகாக அமைத்து வைத்து இருந்தனர். அதில் ஏறி நின்று பார்த்தால் அதிக துரத்திற்குப் பார்க்க

முடியும். அதனால் யாராவது ஊடுருவுவதை விரைவாகக் கண்டு பிடித்துவிட முடியும். அவற்றைப் பார்க்கும் போது இலங்கையில் இராணுவம் அமைத்திருக்கும் தடைகள் போலவே அது தோன்றியது. அந்தக் காட்சி இவர்களும் ஒரு இராணுவம் என்பதைக் கண்ணனுக்கு மீண்டும் நினைவுக்குக் கொண்டு வந்தது.

அந்தப் பாரவூர்தி மெதுவாகச் செல்ல இருவர் திடீரென அதன் முன்பு வந்து நின்று நிறுத்துமாறு அதிகாரமாகக் கட்டளை இட்டார்கள். இராணுவமும் இப்படித்தான் பற்றைக்குள் இருந்து புயல் வேகத்தில் பாய்ந்து வரும். ஆனால் அவர்கள் கைகளில் சுடு திறன் கொண்ட ஆயுதம் எப்போதும் இருக்கும். இவர்கள் கையில் ஆயுதத்திற்குப் பதிலாகச் சவுக்கம் கட்டைகள் இருந்தன. சவுக்கம் கட்டைகளாக இருந்தாலும் அதை ஆயுதமாக நினைத்து வாகனம் நின்றது. உடனே அவர்கள் வந்து அதைப் பரிசோதித்தனர். பின்பு வாகனத்தின் முன்னாசனத்தில் இருந்தவர்களோடு கதைத்தனர். அவர்கள் விசாரணை முடிந்ததும் வண்டியை உள்ளே செல்ல அனுமதித்தார்கள்.

அதன் பின்பு வேகமாகச் சென்ற வாகனம் முகாமில் பரந்த வெளி போன்ற இடத்தில் போய் கடிவாளம் இழுக்கப்பட்ட குதிரை போல் நின்றது. முகாம் எதிர்பார்த்ததைவிட விஸ்தீரணமாகவே இருப்பதாய் கண்ணனுக்குத் தோன்றியது. முகாமின் மத்தியில் சதுரமாகச் சிறிய வேலியால் அடைக்கப்பட்டு அதன் நடுவே நட்சத்திர மேடை. அதன் மத்தியில் கொடிக்கம்பம் நடுநாயகமாக நாட்டப்பட்டு நிமிர்ந்து நின்றது. அதிலே கழகத்தின் கொடி கம்பீரமாகப் பறந்தது. கொடிக்கம்பத்தின் அடியில் நட்சத்திரத்தில் சம்மட்டியால் உலகத்தைப் பிணைத்து இருக்கும் சங்கிலியை அடித்து நொறுக்குவதான கல் வேலைப்பாட்டால் அழகுபடுத்தப்பட்டு உருவம். அந்த நடு முற்றத்தைத் தொடர்ந்து மணல்பாங்கான தரை பரந்து இருந்தது. அது மிகவும் துய்மையாக இருந்ததைக் கண்ணன் அவதானித்தான். முகாமின் மேற்குப் பக்கத்தில் தோழர்கள் தங்கும் பெருங்குடில்கள் நிரைக்கு இருந்தன. அதன் கடைசிக் குடிலாக மருத்துவக் குடில் இடம் பிடித்தது. அவை சவுக்கம் தடிகளால் கட்டப்பட்டு கிடுகால் வேயப்பட்டு இருந்தன. அந்தக் கொட்டில்களை அடுத்து விசித்திரமான மண்வீடுகள் இருந்தன. அவை மிகவும் சிறியவை ஆகவும், மிகவும் தடித்த சுவர்களைக் கொண்டவை ஆகவும் இருந்தன. அது ஏன் அப்படி அமைக்கப்பட்டு இருக்கிறது என்பது கண்ணனுக்குச் சற்றும் விளங்கவில்லை. ஆனால் அதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று மிகவும் ஆர்வமாகியது. அந்த மண்குடில்கள் முகாமின் வடக்குப் பக்கமாக இருந்தன. இந்தக் குடில்களுக்குப் பின்னே சவுக்கம் தோப்புக்கள் தொடர்ந்தன. முகாமின் வடகிழக்கு மூலையில் சமையல் செய்யும் கொட்டிலும், காவல் குடில் ஒன்றும், வெளியே போகும் பாதையும். முகாமின் கிழக்குப் பக்கம் சவுக்கம் தோப்புத் தொடர்ந்தது. முகாமின் தெற்குப் பக்கத்தில் விசேசமான குடில் ஒன்று. அது சிறிய குடில். அதற்கு நான்கு சுவர்கள் இருந்ததோடு அந்த விசித்திரமான மண்குடில் போலக் கதவும் இருந்தது. மற்றைய குடில்கள் கதவுகள், சுவர்கள் அற்றுக் காற்றோட்டமா இருந்தன. தம்மிடம் இரகசியம் இல்லை என்பதாய் அவை கதை பேசின.

'என்ன கண்ணன் யோசிச்சுக் கொண்டு நிக்கிறாய்?' என்றான் சுமன்.

'இல்லை காம்பைப் பார்த்தா பெரிசா இருக்குது... அதுதான்...'

'கலவரத்துக்குப் பிறகு இப்ப இயக்கத்துக்கு நிறையச் சனம் வருகுதாம். அதால முகாங்கள் இப்பிடித்தானே இருக்கும். இதைவிட வேறை வேறை முகாங்கள் வேறை வேறை இடங்களில இருக்குது எண்டு ஒபிசில கதைச்சாங்கள். இந்த முகாங்களில ஒண்டு தேனீ எண்ட இடத்தில இருக்குதாம். அதுதானாம் எல்லா முகாங்களிலும் நல்ல முகாமாம். அங்க போனாப் பெரிய அதிஸ்ரம் எண்டு கதைச்சாங்கள். அனேகமா எல்லாருக்கும் தொடக்கம் இங்கதானாம். பிறகுதானாம் வேறை வேறை முகாங்களுக்கு அனுப்புவாங்களாம்'

'இவ்வளவு விசயம் நீ தெரிஞ்சு வைச்சிருக்கிறாய்?'

'அப்ப நீ என்ன செய்தாய்?'

'நான் அங்க இருந்த ஒரு புத்தகத்தை வாசிச்சுக்கொண்டு இருந்ததில நேரம் போயிட்டுது. உன்னோடைதான் இடைக்கிடை கதைச்சன்'

'ஓ அதை நானும் பார்த்தன்'

'பயிற்சி மட்டும் இல்லை. நிறைய அரசியலைப் பற்றியும் தெரிஞ்சு கொள்ள வேணும். அப்பதான் சனத்திற்கும் உண்மையான போராட்டத்தைப் பற்றி விளங்கப்படுத்திப் போராட்டத்தில பங்குகொள்ள வைக்கலாம். அப்பிடித்தான் உண்மையான மக்கள் போராட்டத்தை உருவாக்க முடியும். அதுதான் இலங்கைக்குச் சரியான போராட்டம் எண்டு

தலைவர் தன்னுடைய பேச்சுக்களில, கட்டுரைகளில விபரிச்சு இருக்கிறார். எனக்கும் அவர் சொல்லுகிறதுதான் சரி எண்டு படுகுது'

'எனக்கு இது பெரிசா சரிவருமா எண்டு தெரிய இல்லை. மற்றவை இராணுவத் தாக்குதல் செய்யேக்க நாங்கள் அரசியல் கதைக்கிறதால சனத்திற்கு எங்களில எவ்வளவு பிடிப்பு வரும் எண்டு ஒரு கேள்வி இருக்குது. சினிமாப் பார்த்துப் பழகிப்போன சனத்திற்குக் கொஞ்சம் வீரசாகசங்கள் தேவைப்படுகுது. எல்லாம் சுடச்சுட உடனடியாக நடக்க வேணும் எண்டு சனங்கள் எதிர்பார்க்குங்கள். அதை நிறைவேற்றாட்டி அதை நிறைவேற்றுறவைக்குத் தங்களின்ரை சப்போட்டைக் குடுக்கப் போகுதுகள். சனத்தின்ரை சப்போட் யாருக்கு இருக்குதோ அவையாலதான் நிண்டுபிடிச்சுப் போராட முடியும்'

'நீ சொல்லுகிறது சனத்தின்ரை உண்மையான பங்களிப்பு இல்லை. அது வெறும் ஆரவாரம் மட்டும்தான். வெறும் ஆரவாரம் நல்ல போராட்டத்திற்கான வழியாய் இருக்காது. போராட்டத்திற்கு மக்களின் பங்களிப்பு மிக முக்கியமானது எண்டுகிறது என்னுடைய அவிப்பிராயம்'

'நீ சொல்லுகிறதிலும் விசயம் இருக்குது. ஆனா தத்துவம் பேசிப் பேசி யதார்த்தத்தை விளங்கிக் கொள்ளாமல் விட்டிடக்கூடாது எண்டதையும் ஞாபகம் வைச்சிருக்க வேணும்'

அவர்களின் கதை தொடர முடியாதவாறு வாகனத்தின் முன்னிருக்கையில் இருந்து இறங்கி வந்த சுருள் முடிக்காரர் அனைவரையும் பார்த்து,

'கெதியா இறங்குங்க. இறங்கி லையினா நில்லுங்க. பொறுப்பாளர் வந்து நீங்கள் என்ன செய்ய வேணும் எண்டு சொல்லுவார்'

அதையடுத்து எல்லோரும் பரபரப்பாய் வாகனத்தில் இருந்து இறங்கி நிரையாக நின்றார்கள். சிறிது நேரம் எல்லோரும் அப்படியே நிரையாகக் காத்துக் கொண்டு நிற்க வேண்டியது ஆகிவிட்டது. பலருக்கும் அது சலிப்பைத் தந்தது. ஆனால் வேறு எதுவும் செய்ய முடியாது என்பதால் தொடர்ந்தும் அமைதி காத்தார்கள். பாரவூர்தியும் அதனோடு வந்த இருவரும் இவர்களை விட்டு விலகி வடக்குப் பக்கமாக இருந்த களஞ்சியக் குடிலை நோக்கி நகர்ந்தனர். அதற்குள்ளேயே பொறுப்பாளரின் அலுவலகமும் இருந்தது.

பொறுப்பாளர் சிறிது நேரம் கழித்து வந்த அந்த இருவரோடும் கதைத்தார். அவர்கள் கொடுத்த பட்டியலையும் வாங்கிப் பார்த்தார். அதைக் கண்ணனால் கவனிக்க முடிந்தது. சிறிது நேரத்தின் பின்பு கழகச் சீருடையோடு முகாம் பொறுப்பாளர் இவர்களை நோக்கி வந்தார். அவரோடு மேலும் ஒருவரும் வந்தார்.

முகாம் பொறுப்பாளரைப் பார்க்கச் சுமனுக்குச் சற்றுப் பயமாக இருந்தது. அவர் கிட்டத்தட்ட ஆறடி உயரம் இருப்பார். கண்கள் ஏனோ உலையால் வந்த இரும்பாகச் சிவந்திருந்தன. முகத்தில் ஒருவித விறைப்பு அப்பி இருந்தது. அந்தச் சிவப்பான கண்களின் ஒளி நெஞ்சைப் பிளப்பதான கூர்மையோடு பாய்ந்தது. அவர் கழகத்தின் சீருடையோடு தொப்பியும் அணிந்து இருந்தார். எல்லோரையும் மீண்டும் மீண்டும் துளைப்பது போலப் பார்த்தார். அது பலருக்கும் ஒருவித நடுக்கத்தைக் கொடுத்தது.

வந்தவர்கள் கட்டளையிட நின்றவர்கள் மேலும் விறைப்பாக நின்றார்கள். பின்பு அதைத் தளர்த்திய முகாம் பொறுப்பாளர் தனது பெயரைக் கூறிவிட்டு ஒவ்வொருவருடைய பெயரையும் கேட்டு அறிந்தார். அப்போது அவர் கைகளைக் குலுக்கி கண்களை மிகவும் கூர்மையாக்கிப் பார்த்தார். அவரின் பார்வை பலரைச் சங்கடப்படுத்தியது. பின்பு முகாம் பொறுப்பாளர் இவர்களை விட்டுப் புறப்பட்டார். போகும் போது,

'இவர்தான் உங்களுடைய முதன்மைப் பயிற்சி ஆசிரியர். இவர் பெயர் பாண்டியன். உங்களுக்கு இவர் முகாமைச் சுற்றிக் காட்டுகிறதோடு முகாமின்ரை நடைமுறையைப் பற்றி விபரமாய் சொல்லுவார். ஒண்டை மாத்திரம் நீங்கள் நல்லாக ஞாபகம் வைச்சிருக்க வேணும். இயக்கத்தில பயிற்சிகள் கடுமையாக இருக்கலாம். இங்க நிச்சயம் சொகுசாய் வாழ முடியாமல் இருக்கும். என்ன கஸ்ரமாய் இருந்தாலும் எப்பவும் நீங்கள் இயக்கத்திற்கும், விடுதலைக்கும் விசுவாசமாய் இருக்க வேணும். அதில யாராவது தப்புப் பண்ணினால் அதை நான் ஒருநாளும் மன்னிக்கமாட்டன். அதைக் கழகமும் ஒருநாளும் மன்னிக்க மாட்டுது. நாட்டு விடுதலை எண்டு வரேக்கையே

எல்லாத்தையும் துறந்து, உயிரையும் அர்ப்பணிக்கத் தயாராகத்தான் வந்து இருக்கிறம். அதில எந்தக் காரணம் கொண்டும் பின்வாங்கக் கூடாது. அதையும் மீறி அப்பிடிச் செய்தா அப்பிடியானவைக்கு நான் எந்த ஈன இரக்கமும் காட்டமாட்டன். எல்லாருக்கும் இது நல்லா விளங்குதா?'

'ஓம்… ஓம்… விளங்குது…'

என்று பலரிடம் இருந்து ஒத்த குரல் வந்தது. கண்ணனிடம் இருந்தும் அந்தக் குரல் பலமாக வந்தது. அவர் எல்லோரையும் பார்த்துத் திருப்தியாகப் புன்னகைத்தார். பின்பு பயிற்றுனரைப் பார்த்து,

'பாண்டியன் நீங்கள் இனி எல்லாத்தையும் விபரமாய் சொல்லுங்க. அதோடை எங்க போய் குளிக்கிறது, எங்க வெளிக்குப் போகிறது எண்டு எல்லாத்தையும் விபரமாய் சொல்லுங்க'

'நான் விபரமாய் சொல்லுகிறன். நீங்க போங்க' என்றார் பாண்டியன்.

அவர் புறப்பட்டுச் சென்றார். பாண்டியன் பயிற்சியாளர்களைப் பார்த்து,

'சரி. எல்லாரும் என்னோடை வாருங்க. முதல்ல முகாமைச் சுத்திப் பார்க்கலாம். அதோடை நீங்கள் தங்க வேண்டிய இடத்தில உங்கடை உடைமைகளை வைச்சிட்டு தொடர்ந்து முழுமையாக முகாமைச் சுற்றிப் பாக்கிறதோடை இங்க எப்பிடி எல்லாம் நீங்கள் இருக்க வேணும் எண்டதை எல்லாம் விபரமாய் சொல்லுகிறன்'

அவர் கூறிவிட்டு முன்னே நடக்க அவர் பின்னே பயிற்சியாளர்கள் தொடர்ந்தார்கள். கண்ணனும் அவர்களோடு நடக்கத் தொடங்கினான். அப்போது நினைவு வந்தவனாய் சுமனைப் பார்த்தான். அவனும் அவர்களோடு சேர்ந்து வந்தாலும் ஏதோ களையிழந்து உற்சாகம் குறைந்தவன் போல அவன் தோற்றம் இருந்தது. வெக்கையாலும் தாகத்தாலும் அவன் அப்படி இருக்கலாம் என்று எண்ணியவன்,

'என்ன சுமன் எல்லாம் ஓக்கேயா?'

'ஏதோ நிறையச் சொல்லுகினம். அதுதான் யோசினை'

'முகாம் எண்டா அப்பிடித்தானே இருக்கும். விடுதலைக்கு எண்டு வந்தா அதிகமான எந்த எதிர்பார்ப்பும் இருக்கக் கூடாது. அதிகமான எதிர்பார்ப்பு இருந்தா விடுதலைக்கான அக்கறையும், அர்ப்பணிப்பும் இல்லாமல் போயிடும். அதால எதுக்கும் நாங்கள் எங்களைத் தயார் செய்து கொள்ள வேணும். அதுதான் புத்திசாலித்தனம்'

'ம்… விட்டா நீயே இப்ப பிரச்சாரம் செய்வாய் போல இருக்குது. நீ நல்ல தெளிவோடைதான் இருக்கிறாய்'

'நான் மட்டும் இல்லை. எல்லாரும் அப்படித்தான் இருக்க வேணும். விடுதலை எண்டு வெளிக்கிட்ட பிறகு இனி அதில எந்தத் தடுமாற்றமோ, தயக்கமோ இருக்கக் கூடாது'

# 2.

அறிமுகம்

'என்னுடைய பெயர் பாண்டியன். நான் உங்களுக்குப் பயிற்சியளிக்கப் போகிறவர். எனக்குத் மற்றவை போல தோழர்களோடை கடுமையாக நடந்து கொள்ளுகிறதில எந்தவித உடன்பாடும் கிடையாது. தோழர்கள் தாங்களாக விரும்பி நாட்டின்ரை விடுதலைக்காக இங்க வந்து இருக்கிறார்கள் எண்டதை முழுமையாக நம்புகிறன். அப்பிடி வந்தவர்களுக்கு இங்க கொடுக்கிற பயிற்சி ஒரு பொருட்டாக இருக்கமாட்டுது எண்டது என்னுடைய அவிப்பிராயம். அனேகமாக என்னை ஒருவரும் கோபம் கொள்ளவோ, கடுமையா நடந்து கொள்ளவோ வைக்கிறது இல்லை. நீங்களும் நிச்சயம் அதைக் கடைப்பிடிப்பீங்கள் எண்டு நினைக்கிறன். நான் சொல்லுகிறது விளங்குதா?'

'விளங்குது மாஸ்ரர்... நல்லாய் விளங்குது' என்று பலரது குரல்கள் ஓங்கி ஒலித்தன. கண்ணனும் தனது சம்மதக் குரலைப் பலமாகக் கொடுத்தான்.

'நல்லது. அப்ப எல்லாரும் எனக்குப் பின்னால வாங்க'

என்று கூறிய பயிற்சி ஆசிரியர் மேற்கொண்டு நடக்கத் தொடங்கினார். அவர் முதலில் வடகிழக்கு மூலையிலிருந்த சமையல் அறைக்குக் கூட்டிச் சென்றார். அங்கே சமையல் நடந்து கொண்டு இருந்தது. ஏதோ இறைச்சியைச் சிலர் சிறிய துண்டுகளாக வெட்டிக் கொண்டு இருந்தார்கள். ஒரு அடுப்பில் சோறு பெரியதொரு கிடாரத்தில் அவிந்து கொண்டு இருந்தது. இன்னும் ஒரு கிடாரத்தில் பருப்பு சமைப்பதற்கு ஆயத்தம் செய்து கொண்டு இருந்தார்கள். பயிற்சி ஆசிரியர் சமையல் கொட்டகையைச் சுற்றிக் காட்டிவிட்டு,

'உங்களுக்கும் சுழற்சி முறையில் சமையல் வேலை வரும். அப்போது இயன்ற அளவு அக்கறையாக, சுவையாகச் சமைக்க வேணும்' என்றார். அப்போது சுமன்,

'என்ன இறைச்சி சமைக்க வரும். ஆட்டு இறைச்சியா?' என்று கேட்டான். அதைக் கேட்டுப் பயிற்சி ஆசிரியர் தன்னைக் கட்டுப்படுத்த முடியாது சிரித்துவிட்டார். பின்பு அதனை அவசரமாக அடக்கிக் கொண்டு முகபாவனையைச் சற்றுக் கடுமையாக்கிய வண்ணம்,

'என்ன இறைச்சியாய் இருந்தால் என்ன? உங்களுக்குத் தருகிறதைச் சமைக்க வேண்டியதுதான். அதிலை எல்லாம் எந்தக் கேள்விக்கும் இடம் இல்லை. எதிலும் தேவை இல்லாத விவாதங்கள் செய்யக் கூடாது. இது இராணுவம் எண்டது நினைவு இருக்க வேணும். சாப்பாட்டு நேரங்களைத் தவிரக் காலைத் தேநீர் வெல்லத்தோடு தருவார்கள். அதை வாங்கிக் குடித்துவிட்டு வெளிக்குப் போய் வரவேணும். வெளிக்குப் போகிறது, குளிக்கப் போகிறது எங்கே என்பதை நான் உங்களுக்குக் கடைசியாகக் காட்டுகிறேன். இப்ப நாங்கள் தொடர்ந்து முகாமைச் சுற்றிப் பார்ப்பம். உங்கடை பொருட்களையும் கெதியாக உங்கடை இடத்தில் வைக்க வேணும். சரி என்னைத் தொடர்ந்து வாருங்கள்'

என்று கூறிய பயிற்சி ஆசிரியர் தொடர்ந்து நடந்தார். அவர் நடந்து களஞ்சியமும் அலுவலகமுமாய் இருந்த கொட்டிலுக்கு முன்பு போய் நின்றார். பின்பு தோழர்களைப் பார்த்து,

'இங்கு நீங்கள் அதிகம் வரவேண்டிய அவசியம் இருக்காது. ஒன்று சமைக்கும் போது அல்லது முகாம் பொறுப்பாளரோடு எதாவது கதைக்க வேணும் எண்டால் மட்டும் நீங்கள் இங்கே வரலாம். அதற்கான தேவைகள் அடிக்கடி வராது எண்டு நினைக்கிறன்' என்றார் அவர்.

'சரி உங்களுக்கு சிக் முகாமைக் காட்டுகிறன். ஏதாவது பிரச்சினை எண்டா டொக்ரர் ரவியைப் பார்க்கலாம். அவர் உங்களுக்கு மருந்து தருவார். கடுமையான பிரச்சனை எண்டா தஞ்சாவூர் மெடிக்கல் காலேச்சிற்கு அனுப்பி வைப்பார்'

‘உங்களை ஒண்டு கேட்கலாமா’ என்றான் திடீரெனச் சுமன்.

‘பிரச்சினை இல்லை. தேவையானதைக் கேட்கலாம். நான் மற்றவைய மாதிரி கடுமையாக இருக்கிறதால துணிவான தோழர்களை உருவாக்கலாம் எண்டு நினைக்க இல்லை. அன்பாக நம்பிக்கை ஊட்டுவதால, வீரமான, நம்பிக்கையான, தோழர்களை உருவாக்கலாம் எண்டு நம்புபவன்’

‘நன்றி தோழர்’

‘சரி நீங்கள் கேட்க வந்ததைக் கேளுங்க’

‘இல்லை சிக் காம்பிற்கு முதல்ல இருக்கிற அந்த குட்டிக் குட்டி மண்வீடுகள் பற்றி ஒண்டும் சொல்ல இல்லையே?’

‘தேவை எண்டா நான் சொல்லி இருப்பன்தானே? தேவையில்லாத எந்த விசயத்திலையும் நீங்கள் எந்தக் காரணத்தைக் கொண்டும் தலையிடக் கூடாது. அதை முதல்ல எல்லாத் தோழர்களும் நல்லா மனதில பதிய வைக்க வேணும். தேவையில்லாத ஆராய்ச்சி, அமைப்புக்கு ஒத்துவராது எண்டு விளங்கிக் கொள்ள வேணும். தேவையில்லாத விவாதங்கள், போராட்டத்திற்கு அல்லது கழகத்திற்கு எதிரான கருத்துக்கள் உங்களைத் தேவையில்லாத சிக்கலில மாட்டிவிடும். அதால நீங்கள் வந்தது எதுக்கோ அதை மாத்திரம் மனதில வைச்சுக் கொண்டு எப்பிடிப் பயிற்சியைக் கடுமையாகச் செய்து திறமையான தோழராய் வருகிறது எண்டு யோசிக்க வேணும். முக்கியமா இது எல்லாருக்கும் தெளிவா விளங்க வேணும். இந்த மண்குடிசை பற்றிச் சுமன் நீ அறிஞ்சு கொள்ள வேண்டியது எதுவும் இல்லை. இனிமேலைக்கு இதைப் பற்றி நீ தேவை இல்லாத ஆராய்ச்சியில ஈடுபடக்கூடாது. யாரிடமும் கேள்வி கேட்கக் கூடாது. சரியா? இதை எல்லாரும் நல்லாய் ஞாபகம் வைச்சிருக்க வேணும்’

‘சரி தோழர். நான் தெரியாமல் கேட்டிட்டன்’

‘இந்த முறை பருவாய் இல்லை. ஆனால் இப்பிடியான கேள்விகள் இதுவே முதலும் கடைசியுமாய் இருக்கட்டும்’

‘சரி தோழர்’

‘வாயைச் சும்மா வைச்சுக் கொண்டு இரு சுமன்’ என்றான் கண்ணன் கடுமையான தொனியில்.

‘சரி விடு. இனிக் கவனமா இருக்கிறன்’

‘அதுதான் எல்லாருக்கும் நல்லது’

‘ம்...’

‘சரி… எல்லாரும் வாங்க. சிக் காம்பைக் காட்டுகிறன்’

என்று கூறிய பாண்டியன் மற்றவர்களின் பதிலை எதிர்பாராது முன்னே நடந்தார். அதைப் பார்த்த தோழர்களும் புகையிரதப் பெட்டிகளைப் போல அவர் பின்னால் தொடர்ந்தார்கள். மருத்துவ முகாமிற்குப் போன போது மருத்துவர் என்று கூறப்படும் தாதிப் படிப்பையே முடிக்காத கௌரவ மருத்துவர் ரவி இவர்களைப் பார்த்துச் சிரித்த வண்ணம் நின்றார். இவரின் அதிகபட்ச சிகிச்சை பி 12 ஊசி ஏற்றுதல். அதைவிட மாத்திரைகள், கலவைகள் அவர் கைவந்த கலை. இவரால் எத்தினை பேர் குணமடைந்தார்கள். எத்தினை பேர் மேலும் வருத்தக்காரர் ஆகினர் என்பது யாருக்கும் தெரியாது.

‘என்ன தோழர்… எப்பிடி வருத்தக் காரர் எல்லாம் இருக்கினம்? யோன்டிஸ்சும் , அம்மை வருத்தமும் பிரச்சனை போல இருக்குது?’

‘ஓமுங்கோ… அது இரண்டும்தான் பெரிய பிரச்சினையா இருக்குது. அதுவும் யோன்டிஸ் பெரிய பிரச்சினை. அதுக்காகச் சிலரைத் தஞ்சாவூருக்கு அனுப்ப வேணும். வெக்கையும் இங்க குறைகிற மாதிரி இல்லை. அதால எல்லாரும் குளிச்சு முழுகி உடம்பைக் குளிர்மையா வைச்சிருக்க வேணும்’

‘இந்தச் சவுக்கங் காட்டுக்க எப்பிடி வெக்கை குறையும்? சமாளிக்க வேண்டியதுதான். அடிக்கடி குளிச்சு முழுகி கொஞ்சம் உடம்பைக் குளிர்மையா வைச்சிருக்கிறது புத்திசாலித்தனம். அதுக்குத்தானே ஆறு, வாய்க்கால் எண்டு இருக்குது. அதை ஒழுங்காப் பயன்படுத்துகிறது நல்லது’

‘கூடியமட்டும் வருத்தங்கள் வராமல் சுத்தமாய் இருக்க வேணும். வாய்க்கால்ல குளிக்கிறது அதுக்கு உதவாது. ஆனா அதைவிட்டா இங்க வேற வழியும் இல்லை’

‘ம்… நீங்கள் சொல்லுகிறதிலையும் உண்மை இருக்குது. ஆனா நாங்கள் சமாளிக்கிறதைத் தவிர வேற வழி இல்லை’

பின்பு சக தோழர்களைப் பார்த்த ரவி,

‘உங்களுக்கு ஏதாவது வருத்தம் வந்தால் நீங்கள் இங்க வரலாம். அந்த நிலைக்கு வராமல் முதல்ல பார்த்துக் கொள்ளுங்க. சுகமில்லாமல் இருக்கிறவைக்கு மேலதிகமாகத் தயிர் தேவைப்பட்டால் இங்க கிடைக்கும். அதே நேரம் பயிற்சி செய்யும் போது ஏதாவது காயம் ஏற்பட்டாலும் இங்க உடனடியாக வரலாம். இங்க வந்தாலும் முகாமிற்கு வெளியால நிண்டே உதவி கேட்க வேணும். ஏன் எண்டால் முகாமிற்கு உள்ளுக்கு அம்மை நோயாளிகள் இருக்கலாம். அது தேவையில்லாமல் உங்களுக்கும் தொத்துகிறதுக்கு ஏதுவாக இருக்கலாம். அதால இயன்ற மட்டும் நீங்கள் பொறுமையாக வெளியாலேயே நிண்டு உதவி கேட்க வேணும். இதைவிட மேற்கொண்டு நான் சொல்லுகிறதுக்கு எதுவும் இல்லை. தோழர் நீங்கள் இவங்களைக் கூட்டிக் கொண்டு போகலாம்’

அதை அடுத்துத் தோழர் பாண்டியன் இவர்களை அழைத்துக் கொண்டு இவர்கள் தங்க வேண்டிய குடிலுக்குச் சென்றார். அது மற்றைய குடில்களைவிட நீளமாக. அதற்குள் கிட்டத்தட்ட நாற்பது தோழர்கள் படுத்து உறங்கலாம் போலத் தோன்றியது. அதற்குள் நிலத்திலேயே அனைவரும் உறங்க வேண்டும். அப்படி உறங்குவதற்குப் புல்லினால் செய்யப்பட்ட பாய் கொடுக்கப்பட்டு இருந்தது. தலையணை தேவைப்படுபவர்கள் வேண்டும் என்றால் பாதணிகளைத் தலைக்கு வைத்துக் கொண்டு உறங்கலாம். அதற்கு எந்தவித தடையும் இல்லை. கிடுகினால் வேயப்பட்ட குடில்கள் வெப்பத்தைச் சிறிது தணித்தன. அதன் சுவர்கள் அப்படியே இடைவெளி விட்டு வேயப்பட்டு இருந்தது. அதனால் காற்று வருவதற்கும் அது மிகவும் வசதியாகியது. பயிற்சி ஆசிரியர் ஒவ்வொருவரும் தங்க வேண்டிய இடத்தைச் சுட்டிக் காட்டினார். தோழர்களும் தாங்கள் கொண்டு வந்த பாய், பாதணி, போர்வை, உடுப்புகள் என்பனவற்றை அங்கே வைத்துவிட்டு அடுத்தது என்ன என்பது போலத் தயங்கியபடி நின்றார்கள். பயிற்சி ஆசிரியர் அவர்களை அப்படித் தொடர்ந்தும் நிற்கவிடாது,

‘நாங்கள் மேற்கொண்டு செல்வோம்’ என்றார்.

‘ஓம்… ஓம்…’ என்ற வண்ணம் தோழர்கள் அவரைத் தொடர்ந்தார்கள்.

பின்பு அவர் மற்றைய தோழர்கள் தங்கும் முகாமைக் காட்டினார். அந்தக் குடில்களும் அவர்கள் குடில்கள் போல இருந்தன. அதற்குள் இருந்த சில தோழர்கள் வந்து அவர்கள் பெயரையும், ஊரையும் கேட்டுக் கொண்டார்கள். எந்தப் போராட்டம் என்றாலும் அறிமுகம், நண்பர்கள் என்றால் அதில் ஊர் முதல் இடத்தில் நிற்கிறது என்பது கண்ணனுக்கு விளங்கியது. கண்ணனுக்குத் தெரிந்த ஊர்க்காரர் யாரும் அங்கே இருக்கவில்லை. பக்கத்து ஊர்களைச் சார்ந்தவர்கள் அங்கே இருந்தார்கள். சிறிது நேர அறிமுகத்தின் பின்பு பயிற்சி ஆசிரியர் அவர்களைப் பார்த்து,

‘சரி உங்களுக்குக் குளிக்கிற வாய்க்காலைக் காட்டுகிறன். அதுக்குப் பிறகு ஆற்றில குளிக்கிற இடத்தைக் காட்டுகிறன். பிறகு நீங்கள் காலமையில எங்க போக வேணும் எண்டதையும் காட்டுகிறன். சரி வாங்க போகலாம்’ என்று கூறிய பயிற்சி ஆசிரியர் நடக்கத் தொடங்கினார். அதனை அடுத்துத் தோழர்களும் அவர் பின்னால் நடக்கத் தொடங்கினார்கள். அவர் முதலில் முகாமின் முகப்பிற்குச் சென்றார். அப்படிச் செல்லும் போது நான்கு பக்கமும் அடைக்கப்பட்ட குடிலிருந்தது. இம்முறை அதற்குள் என்ன இருக்கிறது என்று கேட்கின்ற துணிவு சுமனுக்கோ அல்லது வேறு யாருக்கோ இருக்கவில்லை. அதனால் அவர்கள் அமைதியாக அந்தக் குடிலைக் கடந்து பயிற்சி ஆசிரியரோடு நடந்தனர். இருந்தாலும் பலருக்கும் அதற்குள் என்ன இருக்கிறது என்கின்ற கேள்வி உள்மனத்தில் விடை இல்லாது அலை மோதியது. என்றாலும் ஞானிகளாக அவர்கள் அமைதி காத்தனர்.

முகாமின் முகப்பிற்கு வந்த பயிற்சி ஆசிரியர்,

‘இந்தப் பக்கத்தாலும் வாய்க்காலுக்குப் போகலாம். ஆனால் நாங்கள் இந்தப் பக்கம் இண்டைக்குப் போகத் தேவையில்லை. அதை நீங்களே போய் தெரிஞ்சு கொள்ளலாம். இப்ப நாங்கள் சமையல் அறைப் பக்கம் இருக்கின்ற வாய்க்காலைப் பார்த்திட்டுப் பிறகு ஆற்றைப் பார்க்கப் போகலாம். அதுக்குப் பிறகு நீங்கள் வெளிக்குப் போக

வேண்டிய இடத்தைக் காட்டுகிறன்' என்று கூறிய பயிற்சி ஆசிரியர் தொடர்ந்து சமையல் அறைப் பக்கம் நடந்தார். அவர் பின்னால் அனைவரும் அமைதியாக நடந்தனர். சமையல் அறையிலிருந்து இறைச்சி வாசம் வந்தது. இருந்தாலும் அது ஊரில் வைப்பது போல் மணம் குணம் அற்றதாய் இறைச்சியை நீரில் அவிப்பது போல மணம் வந்தது. சிலவேளை அவித்து பின்பு பிரட்டல் கறியாக வைப்பார்களோ என்று அவன் எண்ணிக் கொண்டான்.

பயிற்சி ஆசிரியர் சமையல் அறையைத் தாண்டி அதன் பின்புறமாகக் கிழக்கு நோக்கி நடந்தார். அவர் பின்னால் அவரது புகையிரதப் பெட்டி கழறாது தொடர்ந்தது. கண் முன்னே பச்சைக் கடலாக விரிந்த வயல் பகுதி. அந்த வாய்க்கால் அதற்கு உயிர்நாடியாக ஊடறுத்து ஓடும் காட்சி. மனிதனுக்குள் இரத்தம் ஓடுவது போல் வயல்வெளியின் இரத்த ஓட்டம் அந்த வாய்க்கால்களாக.

பயிற்சி ஆசிரியர் வாய்க்காலுக்கு அருகே சென்றார். பின்பு அதற்குள் இறங்கினார். அவரின் முழங்காலுக்கு கீழ் வெள்ளம் ஓடிக்கொண்டு இருந்தது.

'இதுக்க எப்பிடிக் குளிக்கிறது?' என்றான் பார்த்திபன். பயிற்சி ஆசிரியர் முதலில் சிரித்தார். பின்பு,

'படுத்துத்தான் குளிக்க வேணும். எவ்வளவு குறைஞ்ச வளத்தோட சிறப்பாக வாழ்கிறமோ அவ்வளவு சிறந்த போராளியாக, தோழராக வரமுடியும். அதால இனிமேலைக்குப் பற்றாக்குறையை ஒரு பிரச்சினையாக் கதைக்காதீங்க. இந்த வாய்க்காலுக்க நீங்கள் படுத்துக் குளிச்சா நிறையத் தண்ணியா இருக்கும். அப்ப நீங்கள் ஈசியாக் குளிக்கலாம். காகம் தண்ணி குடிச்ச கதை மாதிரி தந்திரமாக இருக்கிறதைப் பயன்படுத்தப் பார்க்க வேணும். அதை நாங்கள் ஒவ்வொரு சின்ன விசயத்திலையும் கவனிச்சு நடந்தாத்தான் களத்தில சிறந்த போராளியாகப் போராட்டத்திற்கு முழுப் பங்களிப்பையும் செய்யலாம். நான் சொலுகிறது விளங்குதா?'

'விளங்குது. நீங்கள் சொல்லுகிறதில நிறைய விசயம் இருக்குது. எப்பிடிக் குளிக்க வேணும் எண்ட உங்கடை ஐடியா நல்ல ஐடியாத்தான்' என்றான் பார்த்திபன்.

'சரி இனி ஆற்றைப் போய் பார்ப்பம்' என்று கூறிய பயிற்சி ஆசிரியர் தொடர்ந்து நடக்கத் தொடங்கினார்.

அவர் பின்னால் மற்றவர்களும் நடக்க ஆரம்பித்தார்கள். அவர் தொடர்ந்து நடந்ததில் பலருக்குக் களைப்பாகவும், சலிப்பாகவும் இருந்தது. என்றாலும் யாருக்கும் அவரைக் குடைய மனத்தில் துணிவு இன்றித் தொடர்ந்தார்கள். சிறிது நேரத்தின் பின்பு ஆவலோடு அந்த ஆற்றை அனைவரும் வந்து அடைந்தார்கள். ஆறு வெகு அமைதியாக ஓடியது. வெண் புழுதி ஆற்றுப் படுக்கை அதன்மீது அனைவருக்கும் வெல்ல முடியாத கொள்ளை ஆசையைக் கொணர்ந்தது. ஆனாலும் அதைப் பார்த்தவர்கள் கண்களில் ஒருவித சோர்வு. அந்தத் தெளிவான ஆறு மேலும் சிறிது செழிப்பாக ஓடி இருக்கலாம் என்று அவர்களுக்குத் தோன்றியது. பார்த்த உடனேயே பலராலும் அதில் வாய்க்காலைவிடக் குறைவான உயரத்திலேயே நீர் ஓடுகிறது என்பதை விளங்கிக் கொள்ள முடிந்தது. அதனால் சோர்ந்து போனவர்களைக் கனிவாகப் பயிற்சியாளர் பார்த்து,

'மழை பெய்ஞ்சா நல்லாத் தண்ணி ஓடும். அப்ப வந்தால் சந்தோசமாய் குளிக்கலாம். நாங்கள் இப்ப இங்கயே நிற்க முடியாது. தொடர்ந்து போனால்தான் பார்க்க வேண்டிய இடங்களைப் பார்க்கலாம்?'

'ஓம்... ஓம்...' என்று பல குரல்கள் வந்தன. அதைத் தொடர்ந்து பயிற்சி ஆசிரியர் நடக்கத் தொடங்கினார். வயல் வெளிகள் பார்க்கும் இடம் எங்கும் தொடர்ந்தன. பசுமை அலை இடைவிடாது எங்கும் மோதியது. தமிழகத்தின் நெற்களஞ்சியம் அல்லவா இது. அந்தச் செழுமை பார்ப்பவரை இடைவிடாது மயக்கியது. வயல்கள் ஒருவாறு முடிந்து சவுக்கம் காடு தொடர்ந்தது. அந்த வயல் முடிந்ததும் மேற்குப் பக்கமாகத் தொடர்ந்த உயரமான சவுக்கங் காட்டைக் காட்டி,

'இங்கதான் நீங்கள் காலையில வரவேணும். உங்களோடை நிறையக் கூட்டம் அந்த நேரம் வருவினம். அப்ப நீங்கள் மேற்கொண்டு அறிய வேண்டியதை அறிஞ்சு கொள்ளுங்க. சரி இப்ப வாங்க. இப்பிடியே தெற்க போனாக் கிறவுண்ட்

வருகுது. அதைப் பார்த்திட்டு அப்பிடியே முகாமிற்குப் போகலாம்’ என்ற பயிற்சி ஆசிரியர் தொடர்ந்து நடந்தார். அவரைத் தொடர்ந்து எல்லோரும் அவசரமாக நடந்தார்கள்.

உச்சி வெயில் உலோகத்தையே உருக்குவது போலத் தலைமேல் கொதித்தது. எப்போது முகாமிற்குப் போவோம் என்பது பலரின் எதிர்பார்ப்பாகியது. பயிற்சி ஆசிரியர் எட்டி எட்டி நடந்ததில் விரைவாகவே மைதானத்தை வந்து அடைந்துவிட்டார். மைதானம் மிகவும் விஸ்தீரணமாக இருந்தது. நான்கு எல்லைகளும் சவுக்கம் தோப்புக்கள் அரணாகச் சுவர் போல இருந்தன. பயிற்சிக்காக ஓடி ஓடி அவர்கள் ஓடும் பாதை புல் பூண்டு இல்லாது வண்டில் பாதை போலப் புழுதித் தெருவாகக் கிடந்தது. மற்றைய இடங்களிலும் சொற்பமாகவே ஆங்காங்கே புற்கள் இருந்தன. வெயிலில் நின்று இங்குப் பயிற்சி செய்வது கடினமாக இருக்கும் என்றே கண்ணனுக்குத் தோன்றியது. சுமனுக்கு அதைப் பற்றி எண்ணவே பிடிக்கவில்லை. அவன் எப்போது முகாமிற்குப் போவது என்ற எதிர்பார்ப்போடு அவர்கள் பின்னே பல விடை இல்லாத கேள்விக்குறிகளோடு நின்றான்.

‘இரண்டு றவுண்டு இந்தக் கிறவுண்டைச் சுற்றி ஓடினா நல்லா இருக்கும்... ஆனால் உங்களுக்கு முதல் நாள். அதனால இந்த உச்சி வெயிலில் வேண்டாம். வாங்க போவம்’ என்று கூறிய பயிற்சி ஆசிரியர் நடந்தார். அவரோடு அனைவரும் சேர்ந்து நடந்தார்கள்.

முகாமிற்குத் திரும்பி வந்த பின்பு அனைவரையும் சிறிது நேரம் இளைப்பாறிவிட்டு, குளித்துச் சாப்பிடத் தயாராகும்படி கூறிய பயிற்சி ஆசிரியர் சென்றுவிட்டார். அதன் பின்பு அனைவரும் ‘அப்பாடா’ என்கின்ற நிம்மதியோடு ஓய்வெடுத்தார்கள்.

அப்படி ஓய்வெடுக்கும் போது வேந்தன் என்கின்ற பழைய தோழர் வந்து கண்ணன், சுமன், பார்த்திபன், குமரன் ஆகியவர்களைப் பார்த்துக் குளிப்பதற்குத் தான் அழைத்துக் கொண்டு செல்வதாகக் கூறினார். அது அனைவருக்கும் சம்மதமாக அவர்கள் அவரோடு புறப்பட்டார்கள். முதலில் அலுவலகத்திற்குச் சென்று சவர்க்காரம் வாங்கிக் கொண்டு பின்பு செல்லலாம் என்று கூறிய அவர் அவர்களைக் கூட்டிக் கொண்டு அலுவலகத்தை நோக்கிச் சென்றார். அலுவலகத்தில் உடனடியாக லைபோய் சவர்க்காரம் கிடைத்தது. அவர்கள் அதைப் பெற்றுக் கொண்டு புறப்பட்டார்கள்.

வேந்தன் முகாமின் முன்புறமாகப் போய் குளிப்பதே நல்லது என்று கூறி அவர்களை அந்தப் பக்கம் அழைத்தான்.

‘முன்பக்கம் போய் குளிப்பம். எனக்கு அதுதான் பிடிக்கும்’ என்றான் வேந்தன்.
‘ஏன் தோழர்?’ என்றான் கண்ணன்.
‘துப்பரவை எண்ணித்தான்’
‘அப்பிடி எண்டா அதுக்கு முன்னுக்கு யாரும் குளிக்க... கழுவ... மாட்டினமா?’
‘அது நடக்கும்தான். அதுக்காக நாங்கள் ஏன் அதிகமான அழுக்குக்கை போய் விளவேணும்? பின்னுக்குப் போகப் போக அது இன்னும் அதிகமாகும்’

என்று கூறிய வேந்தன் முகாமுக்கு வண்டி வரும் பாதையால் சென்று பின்பு சவுக்கம் தோப்பு வழியாக நடந்து வாய்க்காலை அடைந்தான். கிணற்றில் குளித்தவர்களுக்கு வாய்க்காலில் குளிப்பது சங்கடமாய் இருந்தது. கழுவுவதும் குளிப்பதும் ஓரே வாய்க்கால் என்பது மேலும் அந்தச் சங்கடத்தை அதிகரித்தது. இருந்தும் அதற்கு மாற்றுவழி இல்லை என்பது அனைவருக்கும் நன்கு விளங்கியது. அதனால் அதை மறந்து அன்றாட வாழ்க்கையில் ஒன்றத் தொடங்கினார்கள்.

அதன் பின்பு லைபோய் முதலில் நுரைத்தது. அவர்கள் மனதில் சந்தோசமும் அப்படியே நுரைத்துப் பொங்கியது. தஞ்சை வெயில் குளிர் நீரையும் வெந்நீராக்கியதும் உடலிற்கு ஒருவித சுகமாகவே இருந்தது. இந்த வாய்க்கால்கள் இல்லை என்றால் தஞ்சை நெற்களஞ்சியம் சுவாசம் அற்றுப் போய் இருக்கும்.

குளித்து முடித்தபோது பசி வயிற்றை அமிலமாகக் கிள்ளியது. அதனால் வேந்தனுக்கு மேலும் அங்கே தாமதிப்பதில் விருப்பம் இருக்கவில்லை. அவன் புறப்பட வேறு வழியின்றி அனைவரும் முகாமிற்கு வந்தார்கள்.

# 3.

சுவைபுதிது

குளித்து முடித்து முகாமிற்குத் திரும்பிய போது சூரியன் நடு வானில் நின்று தலைகளைப் பிளந்தான். அதன் மூர்க்கம் தாங்காது முகாமிற்குள் சென்று அடைக்கலமாக வேண்டும் என்பதே அனைவரதும் முக்கிய குறிக்கோளாய் இருந்தது. அதனால் அவர்கள் நடையில் அசுரவேகம் காட்டி அனலிடம் இருந்து தப்பித்தனர். தங்களது குடிலுக்குள் வந்ததுமே அவர்களுக்கு ஆறுதலாக இருந்தது. இருந்தும் அப்போது அவர்கள் வியர்த்துப் போய் இருந்தார்கள். விடுதலை என்று வந்த பின்பு வியர்வை எல்லாம் ஒரு பொருட்டா என்கின்ற உண்மையை உணர்ந்து அவர்கள் தங்கள் உரையாடலைத் தொடர்ந்தார்கள். அப்போது சாப்பாட்டிற்கான சமிக்கை ஒலித்தது. அதனை அடுத்துத் தட்டையும் குவளையையும் எடுத்துக் கொண்டு அனைவரும் விரைந்தனர். அதில் கண்ணன், சுமன் ஆகியவர்களும் இணைந்து கொண்டனர்.

மீண்டும் வெயிலின் கொடுமை என்றாலும் அதையும் வென்ற பசியின் கொடுமை. அதை நீக்க அந்த வெப்பத்தைப் பொருட்படுத்தாது தோழர்களோடு கண்ணன், சுமன் உடன் அனைவரும் இணைந்து கொண்டார்கள். தோழர்கள் நிரையில் நின்று உணவு வாங்கினார்கள். உணவாகச் சோற்றோடு இறைச்சிக் கறியும், பருப்புக் கறியும் வழங்கினார்கள். அது என்ன இறைச்சிக்கறி என்பது சுமனுக்கு இன்னும் தெரியாது. அது என்னவாக இருக்கும் என்று பலமுறை யோசித்துப் பார்த்துவிட்டான். அவன் ஊரில் கோழிக்கறி சாப்பிட்டு இருக்கிறான். அத்தோடு ஆட்டுக்கறி சாப்பிட்டு இருக்கிறான். அதைவிட வேறு இறைச்சிகள் சாப்பிட்டதில்லை. அதையும் இனிப் பழகிக் கொள்ள வேண்டுமோ என்கின்ற எண்ணம் அவன் மனதில் வந்தது. அவன் அந்த இறைச்சிக் கறியைச் சுவைக்க ஆர்வம் கொண்டான். அது என்ன இறைச்சியாக இருக்கும் என்பதைச் சுவைத்தே அறிய வேண்டும் என்கின்ற முடிவோடு நிரையில் நின்றான். இதை அவதானித்த கண்ணன்,

'என்ன கடுமையான யோசினை சுமன்?' என்றான்.

'அப்படி ஒண்டும் இல்லை'

'என்னவோ யோசிக்கிறாய். அதை உனக்கு வெளியால சொல்ல விருப்பம் இல்லாட்டி விடு சுமன்'

'ஒண்டும் விசேசமாய் இல்லை. உந்த இறைச்சியைப் பற்றினதுதான். உது என்ன இறைச்சியாய் இருக்கும்? அறியாமல் தலை வெடிக்குது'

'என்னவா இருந்தா என்னடா? இயக்கத்துக்கு எண்டு வந்தாச்சுது. இனி தாறத்தைச் சாப்பிட்டு சந்தோசமாய் பயிற்சியைச் செய்ய வேணும். வேறை மாற்றுவழி இங்க கிடையாது'

'ம்… நீ சொல்லுகிறது உண்மை. சாப்பாட்டு விசயத்தில நான் கொஞ்சம் சென்சிரிவ். அதுதான். வேறை ஒண்டும் இல்லை'

'ம்… வா சமாளிப்பம். அதுதான் முதல் பயிற்சி'

'நீ சொல்கிறது சரி'

இவர்கள் முறை வந்தது. தட்டில் முதலில் அளவு கோப்பையால் அள்ளிப் போடப்பட்ட பச்சை அரிசிச் சோறு பட்டென அச்சுப் புக்கைக் கட்டி போல விழுந்தது. அது பழக்கப்பட்ட புழுங்கல் அரிசிச் சோறாக உதிர்ந்து ஒன்றோடு ஒன்று ஒட்டாது இருக்கவில்லை. அதற்குப் பதிலாகப் பஞ்சத்தில் கிடைக்கும் வெள்ளை அரிசிச் சோறாக இருந்ததே சுமனை அதிர்ச்சிக்கு உள்ளாக்கியது. உதிரும் பஞ்சு போன்ற வெள்ளை அரிசிச் சோற்றைச் சம்பலுடன் சாப்பிட்டால் நன்றாக இருக்கும் என்பது சுமனுக்குத் தெரியும். அதுவும் பழஞ்சோறாகச் சம்பலுடன் பெரியம்மா வீட்டில் சுவைத்துச் சாப்பிட்ட நினைவு இன்னும் அவன் மனதில் இருக்கிறது. ஆனால் இதன் மணமே அவனை ஏதோ செய்தது. அந்த நினைவை அழிப்பதாக அடுத்ததாகப் பெரிய பெரிய இறைச்சித் துண்டுகளோடு மஞ்சள் நிறமான குழம்பு ஊற்றப்பட்டது. அதில் இருந்து இறைச்சிக் கறியின் வாசத்திற்குப் பதிலாக ஒருவிதமான இறைச்சி மொச்சை வந்தது. சுமன் அதை ஒருவித ஐயத்தோடு பார்த்தான். அதை அடுத்துப் பருப்பு ஊற்றினார்கள். அது இரசம் போல தண்ணீர் பதத்தில் அவனை மேலும் பயமுறுத்தியது. அத்தோடு குடிப்பதற்கு நீரும் வாங்கிக் கொண்டு

நிழல் கிடைக்காததால் தமது குடிலுக்கே கண்ணனும், சுமனும் திரும்பி வந்தார்கள். பின்பு தங்களது இடத்திலிருந்து சாப்பிடத் தொடங்கினார்கள். ஒரு பிடி அள்ளிச் சுமன் வாயில் வைத்திருப்பான். அப்படி வைத்தவன் கல்லை விழுங்கியது போலக் கண்ணனைப் பார்த்தான்.

'என்ன?' என்றான் கண்ணன்.
'சாப்பிட்டுப் பார்' என்றான் சுமன்.

கண்ணன் அள்ளி அவசரமாய் ஒருவாய் வைத்தான். சாப்பாடு என்பது உண்மையில் உடலுக்குச் சக்தி கொடுப்பதற்காய் கட்டாயமாக உண்ணப்பட வேண்டிய ஒரு பொருள். ஆனால் மனிதர்கள் அதை அப்படிச் சாப்பிடுவதில்லை. மனிதர்களின் சாப்பாட்டில் அதற்கு முதலில் அழகும், வர்ணங்களும் உண்டு. அடுத்ததாக மனதை ஈர்க்கும் வாசம் உண்டு. அதற்கு அடுத்ததாக நாவிற்கு இன்பம் தரும் சுவை உண்டு. இவற்றில் முதல் இரண்டு இல்லாவிட்டாலும் சமாளிக்கலாம். ஆனால் நாவிற்குச் சுவை இல்லாத சாப்பாட்டைச் சாப்பிடுவது மனிதர்களுக்கு ஒருவித தண்டனை போல் ஆகிவிடும். அதையே சுமனின் முகத்தைப் பார்த்த போது கண்ணனால் விளங்கிக் கொள்ள முடிந்தது. அதற்காக என்ன செய்ய முடியும்? ஊரில் உண்ட அதே சுவையான சாப்பாட்டை இங்கும் எதிர்பார்க்க முடியுமா? எல்லாவற்றையும் இழக்க வேண்டும். இழந்தே ஈழத்திற்குப் போராட வேண்டும். இரத்தத்தையும் உயிரையும் இழக்கப் போகின்ற நாம் உணவின் சுவையை இழப்பது பற்றிச் சிந்திக்கலாமா என்று கண்ணனுக்குத் தோன்றியது.
சுமனின் முகம் மாறியது. அவன் சாப்பாட்டுத் தட்டை வைத்துவிட்டு அவசரமாகக் குடிலின் பின்னால் ஓடினான். கண்ணனால் அதற்கு மேல் சாப்பிட முடியவில்லை. அவனும் தட்டை அவசரமாக வைத்துவிட்டு அவனைப் பார்க்கச் சென்றான். அவன் ஓங்காளித்து ஒரு முறை எடுத்துவிட்டான். கண்ணனுக்கு அதைப் பார்க்கச் சங்கடமாய் இருந்தது. கண்ணன் மீண்டும் திரும்பிச் சென்று சுமனின் நீர் குவளையை எடுத்து வந்தான். சுமன் இருந்தவாறே அந்த நீரை வாங்கி வாயைக் கொப்பளித்தான். வாந்தி எடுத்ததில் அவன் சோர்ந்து போய்விட்டான். அவனைப் பார்க்கக் கண்ணனுக்குப் பரிதாபமாகவும், கவலையாகவும் இருந்தது.

'எழும்பி வா சுமன். றை பண்ணிக் கொஞ்சம் எண்டாலும் சாப்பிடு. இல்லாட்டி இரவைக்குத்தான் திரும்பச் சாப்பாடு தருவாங்கள்' என்றான்.
'அந்த மணமே எனக்கு பிடிக்குது இல்லை. இதை எப்பிடிச் சாப்பிட முடியும்?'
'அதுக்குப் பட்டினியாக் கிடக்க முடியுமா? கறியைத் தவித்துப்போட்டுச் சோத்தை மாத்திரம் எண்டாலும் சாப்பிடு. நாளைக்கு எழும்பிப் போய் சாப்பிட எண்டாலும் தென்பு இருக்க வேணும் இல்லையா?'
'அதுதான் முதல் பிரச்சினையே. எனக்கு உந்தச் சாப்பாட்டில ஒண்டின்ரை மணமும் பிடிக்க இல்லை. பிறகு எப்பிடி நான் சோத்தைச் சாப்பிடுவன். தண்ணி மாத்திரம் குடிக்கலாம். அது எனக்கு இப்ப போதும்'
'வாதம் பண்ணாமல் முயற்சி செய் சுமன்' என்று கூறிய கண்ணன் தனது பசியைத் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்கின்ற எண்ணத்தோடு மீண்டும் சாப்பிடத் தொடங்கினான்.

அவனுக்கும் அதன் மணம் மொச்சையாக இதம் தராவிட்டாலும் வேறு வழி இல்லை என்பதை உணர்ந்தவனாய் உண்ணத் தொடங்கினான். அந்த இறைச்சியின் சுவை ஏற்கனவே சாப்பிட்ட இறைச்சியின் சுவை போல இல்லாது ஏதோ கடுமையான இறைச்சியாக இருந்ததோடு அதிக கொழுப்போடும் இருந்தது. அமைப்பைப் பொறுத்தவரை நிச்சயம் மத நம்பிக்கை கிடையாது. அதனால் இது அனேகமாக மாட்டு இறைச்சியாக இருக்கலாம் என்கின்ற எண்ணம் அவனிடம் இருந்தது. கண்ணனுக்கு அதை அறிய வேண்டும் என்பதில் ஆவலாக இருந்தது. கண்ணன் பக்கத்திலிருந்த பழைய தோழர் சிவத்தைப் பார்த்து,

'தோழர் நான் ஒண்டு கேட்கலாமே?' என்றான்.
'என்ன தோழர் கண்ணன்?'
'இல்ல... இது என்ன இறைச்சி தோழர்?'

‘என்னவா இருந்தா என்னத் தோழர். பசிக்குத் தாறத்தைச் சாப்பிட வேண்டியதுதானே? எங்களுக்குத் தேவையானதைத்தானே அவை தருகினம். இதை எங்களுக்குத் தருகிறதுக்கு எவ்வளவு இடத்தில அவை உதவி கேட்டிருக்க வேணும் எண்டு உங்களுக்குத் தெரியுமா?’

‘ஐயோ தோழர் நான் தெரியாமல் கேட்டிட்டன்’

‘எதை?’

‘உங்களைக்... கேட்க வந்த விசயத்தை’

‘சரி இப்ப விளங்குதுதானே தோழர்? இனிமேலைக்கு யாரிட்டையும் இதைப் பற்றிக் கேட்காதையும். சரி இவ்வளவு ஆசைப்படுகிறதால சொல்லுகிறன். இது எருமை மாட்டு இறைச்சி. இண்டைக்குச் சமைச்சது சரியில்லை. இதையும் சிலர் நல்லாய் சமைப்பாங்கள். கிட்டடியில மாட்டிறைச்சி வரும் எண்டு சொல்லுகிறாங்கள். வந்தால் கொஞ்சம் சுவையாச் சாப்பிடலாம். அதுவரைக்கும் சமாளிக்க வேண்டியதுதான். பின்னேரம் ரொட்டி இல்லாட்டிப் புட்டு அவிப்பாங்கள். காலையில கடலையும் பாலும் கிடைக்கும். ஞாயிறு மட்டும் பாண் வரும். சிலவேளை யாரும் ஊர்க்காரர்கள் காட, கௌதாரி அடிச்சுக் கொண்டு வந்து கொடுப்பினம். அது எப்பவாவது அதிஸ்ரமாய் வரும் வராமலும் விடும். காலமையில வெளியில போகிறத்துக்கு முதல் பனங்கட்டியும் தேத்தண்ணியும் தருவினம்’

‘ஐயோ தோழர் நான் சும்மா கேட்டன். நீங்கள் முழு விபரமும் சொல்லுகிறியள். தாங்ஸ் தோழர். சுமனைப் பாருங்க சாப்பிடுகிறான் இல்லை. அதுதான் தோழர்’

‘இங்கை அதெல்லாம் பார்க்கக் கூடாது. யூ நோ சவைவல் ஒப் த பிற்றஸ்ற்?’

‘ஓம் தோழர். மனிதப் போராட்டங்களே அதனாலதானே? எனக்கு விளங்குது. ஆனா அவனுக்கு விளங்க இல்லை. சொன்னாலும் கேட்கிறான் இல்லை’

‘தோழர் கண்ணன் பேசாமல் விடும். அவர் தானா விளங்கிக் கொள்வார். பசிச்சா கறி வேண்டாம் நித்திரை வந்தால் பாய் வேண்டாம் எண்டு தெரியாமலே சொல்லி இருக்கினம்’

‘ம்... நீங்கள் சொல்லுகிறதும் உண்மைதான்’

‘சுமன் கொஞ்சமாவது சாப்பிடு சுமன்’ என்று கண்ணன் கூறினான். பின்பு இருவரும் கை கழுவச் சென்றார்கள்.

சுமனை அலுப்பு முறித்தது. கண்ணனும் தன்னை கவனிக்காது செல்கிறான் என்றும் கவலை உண்டாகியது. அவர்கள் சொல்வது சரியாக இருக்கும் என்றும் தோன்றியது. என்ன செய்வது என்று அவனுக்குக் குழப்பமாக இருந்தது. சுமன் தட்டை எடுத்தான். கறிகளைத் தள்ளிவிட்டு ஒரு வாய் சோறு எடுத்தான். அதைச் சாப்பிட வாய் அருகே கொண்டு செல்ல மீண்டும் வயிற்றைப் பிரட்டியது. அவன் அதை வெளியே எடுத்துச் சென்று கொட்டினான். தட்டைக் கழுவிக் கொண்டு வந்து வைத்துவிட்டுப் பாயை விரித்துப் படுத்தான்.

மீண்டும் கண்ணன் அங்கே வந்தபோது சுமன் நித்திரை ஆகிவிட்டான். அவனைப் பார்க்கக் கண்ணனுக்குக் கவலையாக இருந்தது. இருந்தாலும் இரவு சாப்பிட்டால் எல்லாம் சரியாகிவிடும் என்று எண்ணிக் கொண்டான். அதன் பின்பு கண்ணனும் சிறிது நேரம் நித்திரை கொண்டான். திடீரென வீளை ஒலித்தது. எல்லோரும் திடுக்கிட்டு எழுந்தார்கள். சுமன் இயலாமையில் அந்த வீளை ஒலியையும் மீறித் துங்கினான். அதைப் பார்த்த தோழர் சிவம் பதறியடித்த வண்ணம்,

‘அவனை எழுப்பும் தோழர். கெதியா எழுப்பும் தோழர். இல்லாட்டித் தேவையில்லாமல் சங்கடப்பட வேண்டி வரும்’ என்று கண்ணனை அவதிப்படுத்தினார்.

‘அவன் அலுப்பில நித்திரை கொள்ளுகிறான்’

‘அலுப்பெல்லாம் இங்க பார்க்க முடியாது. செக் பண்ணிக் கொண்டு வரேக்க அவன் றெடியா யூனிபோமோடை நிக்க வேணும். முதல்ல நீர் றெடியாகி நில்லும். இல்லாட்டி நீரும் ஆப்பிட வேண்டி வரும். குயிக்... குயிக்...’ என்று கூறிய தோழர் சிவம் அவதியாகச் சீருடை அணிந்து கொண்டார். அந்த வேகத்தில் கண்ணனும் சீருடையை அணிந்தான்.

பின்பு இருவரும் சுமனின் சீருடையை எடுத்து அவன் மறுக்க மறுக்க மாட்டி விட்டார்கள். எல்லோரும் வெளியே அணிவகுப்பிற்குச் சென்று கொண்டு இருந்தார்கள். ஒருவாறு சுமனுக்குச் சீருடை அணிந்தாலும் அவன் ஒழுங்காக அணிவகுப்பிற்கு வந்து அங்கே நிற்பானா என்பது அவர்களுக்கு விளங்கவில்லை. அணிவகுப்பில் நிற்காவிட்டால் நிறையக் கேள்விகள் வரும். அதற்கெல்லாம் பதில் சொல்ல வேண்டும். அதற்கு இவன் எப்படிப் பதில் சொல்லுவான் என்பது தெரியாது. ஏதாவது தப்பாகப் பதில் கூறினால் அதிலிருந்தே வாட்டத் தொடங்கி விடுவார்கள்.

சுமனுக்கும் நிலைமை சிறிது விளங்கி இருக்க வேண்டும். தள்ளாடித் தள்ளாடி எழுந்து நின்றான். ஒருவாறு அவன் கையைப் பிடித்துக் கொண்டு இருவரும் அணிவகுப்பிற்குச் சென்றார்கள். அணிவகுப்பில் எவரை எவரும் பிடிக்க முடியாது. அதனால் தங்கள் தங்கள் நிலையில் கண்ணனும் தோழர் சிவமும் நின்றார்கள். இதுவரையில் யாரும் எதுவும் கேட்கவில்லை. இனிக் கேட்டால் சுமனே பதில் சொல்ல வேண்டி வரும் என்பது கண்ணனுக்கு விளங்கியது.

அணிவகுப்புத் தொடங்கியது. சுமன் ஆடி ஆடி நின்றதை அணிவகுப்புத் தொடங்கிய உடனேயே பயிற்சி ஆசிரியர் ஒருவர் கண்டுவிட்டார்.

உடனடியாக அவர் வந்து அவனை அணிவகுப்பிலிருந்து வெளியே வருமாறு அழைத்தார். அதைப் பார்த்துத் தோழர் சிவம் மிகவும் கவலையானார். அவர் முகம் சட்டென்று இருண்டு விட்டது. கண்ணன் அதைக் கவனித்தான். பயிற்சி ஆசிரியரிடம் சென்று அவனுக்குச் சுகம் இல்லை என்பதை விளங்கப்படுத்தலாம் என்று எண்ணித் தோழர் சிவத்தைப் பார்த்தான். தோழர் சிவம் 'பேசாமல் நில்' என்று கண்ணைக் காட்டினார். கண்ணன் விளங்காது திகைத்தான். தோழர் சிவம் மீண்டும் அசையாதே என்பது போலக் கண்ணைக் காட்டினார். கண்ணன் மிகவும் மனவேதனையோடு அசையாது நின்றான். கவலையால் அவன் கண்கள் கலங்கிக் கண்ணீர் முத்துக்கள் வெந்நீர் துளிகளாக விழுந்தன.

வெளியே கூட்டிச் சென்ற பயிற்சி ஆசிரியர் சுமனிடம் ஏதோ அதிக நேரம் கதைத்தார். உடம்பைத் தொட்டுப் பார்த்தார். பின்பும் சிறிது நேரம் நின்று கதைத்தார். யார் சுமனைக் கூட்டிக் கொண்டு போனார் என்பதில் தோழர் சிவத்திற்கு ஒருவித ஆறுதலாக இருந்தது. அந்தப் பயிற்சி ஆசிரியர் மிகவும் நிதானமாக, அன்பாக நடப்பவர். ஆனால் ஏமாற்றினால் மட்டும் தலைகால் தெரியாத கோபம் வந்துவிடும். அவர் கதைத்ததைக் கவனித்த தோழர் சிவத்திற்கு நிம்மதியாக இருந்தது. தோழர் சிவத்திற்கு ஒன்றும் இசகுபிசகாக நடக்காது என்கின்ற நம்பிக்கை அதனால் வேரூன்றத் தொடங்கியது.

சுமனை அழைத்துச் சென்ற பயிற்சி ஆசிரியர் அவனை வருத்தக்காரர்கள் தங்கும் முகாமிற்குக் கூட்டிச் சென்றார்.

முதலில் அணிவகுப்பு நடந்தது. பின்பு மாலைப் பயிற்சி தொடர்ந்தது. அதையும் முடித்துக் கொண்டு முகாமிற்கு வந்த போது சுமன் தயிரும் சோறும் சாப்பிட்டுக் கொண்டு இருந்தான். அதைப் பார்த்த தோழர் சிவம் கண்ணனைப் பார்த்து முதலில் கண்ணைச் சிமிட்டினார். பின்பு கண்ணனைப் பார்த்து,

'மேலைக் கழுவிக் கொண்டு வருவமே' என்று கேட்டார்.

'ஓ போயிட்டு வருவம்' என்று குமரனும் எழுந்தான். கண்ணன் தயாரானதும் அனைவரும் புறப்பட்டு மேல் கழுவ வாய்க்காலுக்குச் சென்றனர். கண்ணனிடம் பல கேள்விகள். அதையெல்லாம் தோழர் சிவத்திடம் கேட்க வேண்டும் என்கின்ற அவா. அவர் என்ன பதில் சொல்லுவார் என்பதில் அவனுக்குச் சிறு தயக்கம் இருந்தது. அதே நேரம் தயங்கினால் வேலைக்கு ஆகாது என்பதும் அவனுக்கு விளங்கியது. அதனால் மனதில் இருப்பதைக் கேட்டுவிட வேண்டும் என்று அவன் முடிவு செய்து கொண்டான்.

'தோழர் சிவம்'

'என்ன தோழர் கண்ணன்?'

'எனக்குச் சில சந்தேகங்கள் இருக்குது. நான் உங்களிட்டை அதை எல்லாம் கேட்கலாமா தோழர்?'

'கேளுங்க தோழர்… கேளுங்க. அதுக்கு ஏன் நீங்கள் தயங்க வேணும்?'

'இல்லைத் தோழர் கேள்வி அப்பிடி… அதாலதான்…'

'ஓ… பருவாய் இல்லைக் கேளும்'

‘நாங்கள் நினைச்சதைவிடச் சாப்பாடு இங்க மோசமாகத்தான் இருக்குது. நான் சமாளிப்பன். ஆனா சுமனுக்கு நிச்சயம் கஸ்ரமாய் இருக்கும். அதை ஒருமாதிரிச் சமாளிக்கலாம்’

‘அப்ப வேறை என்னத் தோழர் சந்தேகம்?’

‘இல்லைத் தோழர்... பயிற்சி எல்லாம் எப்பிடி இருக்கும்?’

‘பயிற்சி எண்டா பயிற்சியாகத்தான் இருக்கும். அதில யாருக்கும் எந்தப் பாகுபாடும் இருக்காது’

‘பாகுபாடு இருக்காது எண்டு தெரியுது. ஆனாக் கடுமையான பயிற்சியாக இருக்குமா?’

‘எது தோழர் கடுமையான பயிற்சி? எது தோழர் கடுமை இல்லாத பயிற்சி? தாற பயிற்சியைச் செய்ய வேணும். ஒழுங்கா அதைக் கற்றுக் கொள்ள வேணும். இதிலை கேள்விக்கு எந்த இடமும் இல்லை’

‘தோழர் நீங்கள் சொல்லுகிறது விளங்குது. நான் ஒருமாதிரிச் சமாளிப்பன். ஆனா சுமன்தான் கஸ்ரப்படுவான் எண்டு பயமா இருக்குது’

‘தோழர் நீங்கள் உங்களைக் கவனியுங்க. சுமன் தன்னைக் கவனிக்க வேண்டியது அவருடைய பிரச்சினை. அதுக்கு நாங்கள் எதுவும் செய்ய முடியாது’

‘உண்மைத் தோழர். எண்டாலும் சுமன் என்னோட வந்தவன். ஊரிலேயே அவனைத் தெரியும். அதால எனக்கு அவன் மேல அக்கறை இருக்குது. அதை மாற்ற முடியாது’

‘நல்லது தோழர். ஆனா அது இங்க சரிவராது. சிலவேளை நீரும் அவரும் வேறை வேறை முகாமிற்கே போக வேண்டி வரும். அதால சுமனை நீங்கள் எல்லா இடமும் கவனிக்க முடியாது. அவர் அவரையே கவனிச்சுக் கொள்ள வேணும் தோழர்’

‘நீங்கள் சொல்லுகிறது சரிதான். எண்டாலும் எனக்குக் கவலையா இருக்குது. சாப்பாட்டிலேயே அவனுக்குப் பிரச்சினை தொடங்கீட்டுது. அதுதான் கேட்டன்’

‘விளங்குது தோழர். நீங்கள் உங்களைப் பார்த்துக் கொள்ளுங்க. சுமன் தன்னைப் பார்த்துக் கொள்ளுவார்’

மேல் கழுவி முடிந்து எழும் போது சூரியன் மேற்கு வானை எரித்து மாயாஜாலம் காட்டிக் கொண்டு இருந்தான். அந்த ஜாலத்தைக் கண்ணுக்கு கண்வெட்டாது பார்த்துக் கொண்டே நிற்க வேண்டும் போல் இருந்தது. மற்றவர்களும் அதைப் பார்த்து தங்களை மறந்து இரசித்தார்கள். அதனால் சிறிது நேரம் எல்லோரும் தங்களை மறந்து மேற்கே பார்த்துச் சிலையாகி நின்றார்கள். அடுத்த அணிவகுப்பிற்கு நேரம் ஆகியது. அவர்கள் அதை எண்ணி மீண்டும் முகாமிற்கு வந்தார்கள்.

சுமன் நன்றாகத் துங்கினான். அதைப் பார்த்த தோழர் சிவம்,

‘அவரை இனி எழுப்பி விடுங்க. அடுத்த பரேட்டுக்குப் போக வேணும். அது முடியச் சாப்பாட்டுக்கு விசில் அடிப்பாங்கள். இரவுச் சாப்பாடாவது சாப்பிடுவார்தானே?’ என்று கண்ணனைப் பார்த்துக் கேட்டார்.

‘எனக்குத் தெரிய இல்லைத் தோழர். அவரை நான் எழுப்பிறன். அப்பதான் அவற்றை நிலைமை தெரியும்’

கண்ணன் சுமனை எழுப்பினான். எழும்பிய அவனுக்கு முதலில் தான் எங்கே இருக்கிறேன் என்பது விளங்கவில்லை. அதனால் அவன் திரு திருவென முழித்தான். பின்பு தன்னைச் சமாளித்த வண்ணம் எழுந்து உட்கார்ந்தான்.

‘சுமன் வெளிக்கிடு. விசில் அடிக்கப் போகுது. பரேட்டுக்குப் போக வேணும்’ என்றான் கண்ணன்.

‘தெரியும். ஆனாச் சரியான அலுப்பாய் இருக்குது. உடம்பில சத்தியே இல்லை. நான் என்ன செய்ய முடியும்?’

‘என்னவா இருந்தாலும் சரி... வெளிக்கிடும்’ என்றார் தோழர் சிவம்.

‘ஓ வெளிக்கிடுகிறன்’

என்று கூறிவிட்டு அவன் அலுப்போடு எழுந்து வெளிக்கிட்டான்.

‘இண்டைக்கே இவ்வளவு அலுப்பு எண்டா… நாளைக்கு றெயினிங் செய்த பிறகு எப்பிடிப் பரேட்டுக்குப் போகப் போறீர்?’ என்றார் தோழர் சிவம். சுமன் அதற்குப் பதில் கூறவில்லை. கண்ணன் முதலில் சிரித்தான். பின்பு, ‘அதெல்லாம் சுமன் சமாளிப்பான்’ என்றான்.

‘சமாளிக்கத்தான் வேணும். வேற வழி இல்லை’ என்றார் தோழர் சிவம்.

இவர்கள் கதைத்துக் கொண்டு இருக்கும் போது மாலை அணிவகுப்பிற்கான வீளை ஒலித்தது. எல்லோரும் பரபரப்பாகக் குடில்களுக்கு நடு நாயகமாக இருந்த அந்தப் பரந்த மைதானத்தை நோக்கிச் சென்றார்கள். சுமனும் அவர்களோடு சேர்ந்து கொண்டான். அவன் முகத்தில் ஒருவித ஐயம் படர்ந்து இருந்தது. அவனை இப்போது பார்ப்பதற்கும் முகாமிற்கு வர முன்பு பார்த்ததிற்கும் நிறையவே வித்தியாசம் இருப்பதைக் கண்ணன் கிரகித்தான். அப்போது எல்லாம் அவன் பார்வையில் ஒரு பரபரப்பு. பயிற்சி செய்து போராட வேண்டும் என்கின்ற சுடர்விடும் ஆர்வம் இருந்தது. இப்போது அந்த ஆர்வம் எல்லாம் மறைந்து ஐயம் மாத்திரமே அவன் முகத்தில் தங்கி நிற்கிறது. எதனால் இவ்வளவு கெதியாக அவனிடம் இவ்வளவு பெரிய மாற்றம் என்பது கண்ணனுக்கு விளங்கவில்லை. நிச்சயம் அவன் எதிர்பார்ப்புக்கும் இங்கு நடப்பதற்கும் நிறைய வித்தியாசம் இருக்கலாம். எது எப்படி இருந்தாலும் எல்லாவற்றையும் சமாளித்துச் செல்ல வேண்டும். அதைச் சுமன் மிகவும் தெளிவாக விளங்கிக் கொள்ள வேண்டும். விளங்கிக் கொள்வானா என்பது கண்ணனுக்குத் தெளிவாகத் தெரியவில்லை.

‘என்ன கண்ணன் கடுமையா யோசிக்கிறா?’ என்றார் தோழர் சிவம்.

‘எல்லாம் சுமனைப் பற்றித்தான்’ என்றான் கண்ணன்.

‘அவர் விளங்கிக் கொள்வார். அது முக்கியம் எண்டது அவருக்கு விளங்கி இருக்கும் எண்டு நினைக்கிறன். என்ன சுமன்?’

‘ஓ… ஓ… விளங்குது’ என்றான் சுமன்.

‘அது நல்லது’ என்றான் கண்ணன்.

எல்லோரும் அணிவகுப்பிற்கு வந்து அந்தந்த இடங்களில் நின்றார்கள். அணிவகுப்புக் கணக்கெடுப்போடு தொடங்கியது. கணக்கெடுப்பில் எண்ணிக்கைகள் பலமுறை சரிபார்க்கப்பட்ட பின்பு அதை உறுதிப்படுத்தினார்கள். பின்பு முகாம் நடைமுறைகள் பற்றிக் கதைத்தார்கள். அப்போது காலையில் யாரும் பயிற்சிக்குப் பிந்தி வரக்கூடாது என்றும் அப்படிப் பிந்தி வந்தால் தயவு தாட்சண்ணியம் இன்றித் தண்டனை வழங்கப்படும் என்றும் அறிவுறுத்தப்பட்டது. அதில் கண்ணனுக்கு எந்தச் சந்தேகமும் இருக்கவில்லை. சுமனுக்கும் அது தெளிவாக விளங்கி இருக்கும் என்றே எண்ணினான். ஆனால் அவனை இப்போது அதைப் பற்றிக் கேட்க முடியாது. அணிவகுப்பில் நிற்கும் போது ஆட்டம் அசைவு எதுவும் இருக்கக்கூடாது. இருந்தால் அதற்கும் தண்டனை கிடைக்கும். அதனால் இராணுவ விதிகளைக் கடுமையாகக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதில் கண்ணனுக்கோ தோழர் சிவத்திற்கோ மாற்றுக் கருத்து இருக்கவில்லை.

அணிவகுப்பு முடிந்த பின்பு மைதானத்தின் மென் மணலில் ஆங்காங்கே கூட்டம் கூட்டமாக இருந்து தோழர்கள் சுவாரசியமாகக் கதைத்தார்கள். கண்ணன், சிவம், சுமன், குமரன், சோழன் ஆகியோர் சுற்றி ஒரு இடத்திலிருந்து கதைத்தார்கள். அது சுமனுக்கும் மிகவும் ஆறுதலாக இருந்தது. வெக்கை அடங்கிச் சந்திரன் தனது குளிர் கிரணங்களைப் பரப்பிக் கொண்டு இருந்தான். நான்கு கரையும் சவுக்கம் தோப்புகள் மலை போல நிமிர்ந்து அமைதி பேசின. சவுக்கு மரங்கள்கூடச் சந்திரப் பிரசன்னத்தில் சீதள அலைகளைப் பிரசவித்தது. மாலைச் சாப்பாடாக ரொட்டி செய்யும் வாசம் வந்தது. ரொட்டியும் பருப்புக் கறியும் மாலைச் சாப்பாடாக வழங்கப்படும் என்பது கண்ணனுக்குத் தெரியும். சுமன் அதை விரும்பி உண்ண வேண்டும் என்பது அவன் பிரார்த்தனையாக இருந்தது.

‘என்ன தோழர் கடுமையா யோசிக்கிறியள்?’ என்றார் தோழர் சிவம்.

‘ஒண்டும் இல்லை. ரொட்டி வாசம் வருகுது. அதுதான் பின்னேரச் சாப்பாடு எப்பிடி இருக்கும் எண்ட ஒரு கற்பனை தோழர்’

‘சாப்பாடு நல்லா இருக்கும் எண்டு நினைச்சாச் சாப்பாடு நல்லா இருக்கும். சாப்பாடு கூடாமல் இருக்கும் எண்டு நினைச்சாச் சாப்பாடு கூடாமல்தான் இருக்கும். சுவை எண்டுகிறது நாக்கில தெரிஞ்சாலும் மூளைதான் அதைப் பிரதிபலிக்கிறது எண்டுகிறது உண்மை. அதால தாறது எல்லாம் நல்ல சுவையா இருக்குது எண்டு நினைச்சுக் கொண்டு சாப்பிட்டா அது சுவையாகவே இருக்கும். இதுக்கு எல்லாம் கடுமையா யோசிக்கக் கூடாது. நிச்சயமா இந்த உணவுப் பொருட்களைச் சேர்க்கிறதுக்கும் இங்க கொண்டு வாறதுக்கும் கழகம் எவ்வளவு கஸ்ரப்பட்டு இருக்கும் எண்டதை யோசிச்சாச் சாப்பாட்டில நாங்கள் சுவை பார்க்கிறதை மறந்து போக வேணும். விடுதலை எண்டு வெளிக்கிட்டு வந்து இருக்கிறம் தோழர். இப்ப இங்க வந்து எங்கடை நலத்தை எதுக்காகவும் முன்னிறுத்தக் கூடாது. எதையும் சமாளிச்சுப் போக வேணும். நான் சொல்லுகிறது சரியா?’ என்றார் தோழர் சிவம்.

‘உண்மைதான் தோழர் சிவம். எங்களுக்கு நீங்கள் சொல்லுகிறது நல்லா விளங்குது. போராட்டத்தில சுயநலத்திற்கு ஏது இடம்? சுயநலம் பார்க்காத நாங்கள் சுவை பார்க்க முடியுமா?’ என்றான் கண்ணன்.

‘சுமன் இப்ப எல்லாம் ஓக்கேயா?’ என்றார் தோழர் சிவம்.

‘ஓம் தோழர்’

‘ஊரில எப்பிடி இருந்தம் எண்டதை எல்லாம் மறந்திட்டு இங்க இருக்கிற நிலைமைக்கு ஏற்ப எங்களை மாற்றிக் கொள்ள வேணும். அதுதான் புத்திசாலித்தனம்’ என்றார் தோழர் சிவம்.

‘விளங்குது தோழர்’

‘அவன் பிழைச்சிடுவான் தோழர்’ என்றான் தோழர் குமரன்.

கண்ணன் சுமனைப் பார்த்தான். அவன் சேர்ந்து இருந்து கதைத்தாலும் அவன் முழு இருப்பும் அங்கே இருப்பதாய் கண்ணனுக்குத் தோன்றவில்லை. எல்லாம் போகப் போகச் சரியாகும் என்று எண்ணிக் கொண்டான்.

சிறிது நேரத்தில் மாலைச் சாப்பாட்டிற்கான வீளை அடிக்கப்பட்டது. அனைவரும் தட்டையும், குவளையையும் எடுத்துக் கொண்டு சென்றார்கள். மனது சம்மதிக்காவிட்டாலும் வேறு வழியின்றிச் சுமனும் அவர்களோடு சேர்ந்து கொண்டான். மத்தியானம் சாப்பிட்டது போல் இப்போது இருக்கக் கூடாது என்று கழகத்தின் கொள்கைக்கு எதிராக, இரகசியமாகக் கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டான்.

சுமனுக்குச் சாப்பாடு பிடிக்காவிட்டால் என்ன? மற்றைய தோழர்களுக்கு அப்படி இல்லை என்பது போல நிரை நீண்டு, வளைந்து, வளர்ந்து நின்றது. அதன் இறுதியில் கண்ணன், குமரன், தோழர் சிவம் நிற்க இறுதியாகச் சுமன் அதைத் தொடர்ந்தான். சிறிது நேரத்தில் அவனையும் தொடர்ந்து பலர் நின்றார்கள்.

சாப்பாடாக மூன்று ரொட்டிகளும் பருப்புக் கறியும் வழங்கப்பட்டன. அத்தோடு குடிப்பதற்கு நீரும் எடுத்துக் கொண்டு வந்து மைதானத்தில் வெளிச்சம் பார்த்து அமர்ந்தார்கள். பசியிலிருந்த தோழர்களுக்கு அதற்கு மேல் கதைப்பதைவிடப் புசிப்பதில் ஆர்வம் பொங்கியது. ரொட்டியின் வாசம் அதை மேலும் நெருப்பாகத் துண்டியது. ரொட்டியைக் கிழித்துப் பருப்பை அதில் அள்ளிப் புசிக்கத் தொடங்கினார்கள். அதைப் பார்த்துக் கொண்டு இருந்த சுமன் தானும் ஒரு துண்டை அப்படிக் கிழித்துப் பருப்புக் கறியில் சிறிதை அள்ளி வாயில் வைத்தான். அவனுக்கு மீண்டும் வயிற்றைப் புரட்டுவது போல இருந்தது. கறி இல்லாது ரொட்டியை மட்டும் சாப்பிடலாம் என்று எண்ணி ரொட்டியை மட்டும் எடுத்துச் சிறு துண்டைக் கிழித்து வாயில் வைத்தான். அதில் உப்பும் இல்லைச் சுவையும் இல்லை என்பதை அப்போது அவன் அறிந்து கொண்டான். வயிறு குளறியது. வேறு வழி எதுவும் இருப்பதாக அவனுக்குத் தெரியவில்லை. அவன் மெதுவாக மெல்லத் தொடங்கினான். அதைப் பார்த்த தோழர் சிவம்,

‘கறியையும் சேர்த்துச் சாப்பிடுங்க தோழர். இங்க எது தந்தாலும் பயிற்சி செய்கிறவைக்கு அவசியமான உணவுதான் தருவினம். அதில கறியை விட்டியள் எண்டாத் தேவையான சக்தி உங்களுக்குக் கிடைக்காமல் போயிடும். அதால எதையும் விடாமல் சாப்பிடப் பாருங்க. அதுதான் புத்திசாலித்தனம்’

‘இல்லைத் தோழர். அதையும் சாப்பிட நினைச்சா நான் இதையும் சாப்பிட முடியாது. தயவு செய்து என்னைத் தெண்டிக்காதேங்க’

‘நான் தெண்டிக்க ஒண்டும் இல்லை. உங்கடை நன்மைக்குச் சொன்னன் தோழர். அதுதான் இங்குள்ள நிதர்சனம். அதை நீங்கள் நல்லா விளங்கிக் கொள்ள வேணும். அப்பதான் பயிற்சியை முடிச்சு… வந்த அலுவலைப் பார்க்கப் போகலாம். அதுதான் எல்லாருடைய முக்கிய நோக்கம் எண்டதை மறக்க முடியாது தானே?’

‘விளங்குது தோழர். கொஞ்சம் கொஞ்சமாய் முயற்சி செய்கிறன். உங்களுக்கு என்னுடைய நிலமை விளங்கும் எண்டு நினைக்கிறன்’

‘ம்…’

‘சுமன் சொல்லுகிறதைக் கொஞ்சம் கவனி. தந்ததை நல்லாச் சாப்பிடு. நாளைக்குக் காலையில பயிற்சி இருக்குது. பட்டினியா இருந்திட்டு அங்க போய் கஸ்ரப்படுகிறது இல்லை’

‘எனக்கு விளங்குது கண்ணன். தயவு செய்து இப்ப நீயாவது சும்மா இரு’

அதன் பின்பு கண்ணன் எதுவும் கதைக்கவில்லை. சுமன் அரைகுறையாகச் சாப்பிடுவதை மட்டும் அவதானித்தான். அவதானித்தாலும் அவனால் எதுவும் சொல்ல முடியவில்லை.

# 4.

புதிய நாள்

சுமனின் அம்மா அவனுக்கு அரிசிமாப் பிட்டோடு சம்பலும், உருளைக்கிழங்குப் பொரியலும் போட்டுத் தயிரும் விட்டுக் குழைத்து ஊட்டிக் கொண்டு இருந்தார். சுமனும் அதைச் சுவைத்துச் சாப்பிட்டான். அம்மாவின் கைப்பட்டாலே தனிச் சுவை. அம்மாவே சமைத்தால் அது தெவிட்டாத தேவாமிர்தம். அந்தத் தேவாமிர்தத்தை நித்தம் உண்ணக் கிடைத்ததே எப்பிறப்பிலோ செய்த பெரும் புண்ணியம். அப்படி அவன் சுவைத்து உண்ணும் போது அவர்கள் வீட்டின் முன்பு இராணுவ வண்டி ஒன்று வந்து நின்றது. அதைக் கண்டவுடன் சுமன் யோசிக்காது வேலியைத் தாண்டி ஓடினான். அவன் ஓடியதால் ராணுவம் அவன் அம்மாவைச் சுட்டுக் கொன்றது. 'அம்மா... அம்மா... ஐயோ... அம்மா...' என்று கத்திப் பக்கத்தில் படுத்து இருந்தவர்களையும் குழப்பினான் சுமன். கண்ணன் அவனின் சத்தத்தில் முழித்துவிட்டதால் அவன் கன்னத்தில் தட்டினான். அவன் தட்டியதை அடுத்து முழிப்பிற்கு வந்த சுமன் என்ன நடந்தது என்பது விளங்காது விழித்தான். அவனை அப்படிப் பார்த்த கண்ணன்,

'என்ன கனவே கண்டனீ?' என்றான்.

'ம்... ஊரில அம்மா சாப்பாடு தார மாதிரி'

'மனதில உள்ள ஆசை கனவா வந்து இருக்குது'

'சாப்பாடு மாத்திரம் எண்டாப் பருவாய் இல்லை. ஆமி வாற மாதிரி... அம்மாவைச் சுடுகிற மாதிரி... எனக்கு என்னவோ போல இருக்குது'

'அது எல்லாம் சும்மா கனவு... மனப்பீதி... பேசாமல் படு. காலமை போட்டு முறிப்பாங்களாம்'

'ம்... எனக்கு ஏற்கனவே உடம்பு இயலாமல் இருக்குது'

'ஒழுங்காச் சாப்பிடு எண்டு எல்லாரும் அதுக்குத்தான் விழுந்து விழுந்து உனக்குச் சொன்னது. இனியாவது விளங்கும் எண்டு நினைக்கிறன்'

'ச்... விடு. இயலுமானவரை நான் றை பண்ணுவன்'

'இது ஒற்றை வழிப்பாதை'

'தெரியும்'

'இப்ப படு. கெதியாய் பொழுது விடிஞ்சிடும். பிறகு கால் குண்டியில தட்ட ஓட வேணும்'

'ம்...'

அவன் திரும்பிப் படுத்தான். அதனால் கண்ணன் மேற்கொண்டு நித்திரை கொள்ளக் கடுமையாக முயன்றான். கூவுவதற்குச் சேவல் அருகில் இல்லை. ஆனால் திடீரென வீளைச் சத்தம் பிளிறிற்று. எல்லோரும் துடித்துப் பதைத்து எழுந்தார்கள். கண்ணனும் அவர்களோடு எழுந்தான். சுமன் தொடர்ந்தும் நித்திரை கொள்வதைப் பார்க்க முதலில் என்ன செய்வது என்று அவனுக்கு விளங்கவில்லை. பின்பு யாராக இருந்தாலும் பயிற்சிக்குச் செல்ல வேண்டும் என்கின்ற உண்மை உறைக்க அவசரமாக அவனை உலுப்பி எழுப்பினான். அவன் எழாது நித்திரை கொள்வதைப் பார்க்கப் பரிதாபம் தோன்றியது. அத்தோடு ஏனோ பயமாகவும் இருந்தது. கண்ணன் சுமனைத் தெண்டி எழுப்பி இருத்தினான். அவன் சிரமப்பட்டு எழுந்து இருந்தான்.

'நீ எழும்பி வாரியா? இல்லாட்டி நான் வெளியால போகட்டுமா? நீ விரும்பித்தானே இயக்கத்துக்கு வந்த நீ? பிறகு அதுகின்ரை கட்டுப்பாடு சட்டதிட்டங்களுக்கு ஏற்ப நடக்காட்டி அதுக்கான விளைவையும் ஏற்க வேணும். என்னால இயலுமானவரைச் சொல்லத்தான் முடியும். அதுக்கு மேல உன்னுடைய விருப்பம்' என்று கூறிய கண்ணன் கோபத்தோடு எழுந்தான். சுமனக்கு நிலமை சாதுவாக விளங்கத் தொடங்கியது. அவன் தெண்டித்து எழுந்தான். கண்ணன் அதற்குமேல் தாமதியாது குவளையை எடுத்துக் கொண்டு வெளியே சென்றான். சுமனும் தனது குவளையை எடுத்துக் கொண்டு வெளியே வந்தான்.

எல்லோருக்கும் காலைத் தேநீர் கொடுக்கப்பட்டது. வரிசையில் நின்று கண்ணனும் சுமனும் அதைப் பயபக்தியோடு வாங்கினார்கள். அது வெறும் தேநீர். அத்தோடு துண்டு வெல்லமும் தந்தார்கள். அதைக் குடித்து இதைக் கடித்து முடித்த பின்பு வெளிக்குப் போய் வர வேண்டும். அதன் பின்பு முகம் கழுவி உடை மாற்றிக் கொண்டு பயிற்சிக்குச் செல்ல வேண்டும். நேரத்திற்குப் பயிற்சிக்குச் சென்றுவிட வேண்டும் என்பதில் கண்ணனுக்கு மிகவும் அக்கறை இருந்தது. அவன் தேநீரை விரைவாகக் குடித்து முடித்து விட்டுச் சுமனைப் பார்த்தான். சுமனும் ஒருவாறு அதை விளங்கிக் கொண்டு தேநீரை விரைவாகப் பருகி முடித்துவிட்டுக் கண்ணனோடு புறப்பட்டான். இருவரும் காலைக் கடனை முடித்து மைதானத்திற்கு நேரத்திற்கு ஒருவாறு வந்ததில் கண்ணனுக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது.

சுமனை இதுவரையும் இழுத்து வந்ததில் கண்ணனுக்கு ஒரு சொல்ல முடியாத பெருமை. மேற்கொண்டு அவன் செய்ய வேண்டிய பயிற்சியை அவனே செய்ய வேண்டும். அவனுக்காக யாரும் பயிற்சி செய்ய முடியாது. அதை எல்லாம் கவனிப்பது தனது வேலை இல்லை என்று எண்ணினான். என்றாலும் சுமனை எண்ணும் போது அவனைத் தொடர்ந்தும் கவலை வாட்டியது. பயிற்சிகள் தொடங்கின. அணிவகுப்பில் ஒன்றாக நின்றாலும் ஓட்டம் தொடங்கிய பின்பு அவனைக் கண்ணனால் கவனிக்க முடியவில்லை. கண்ணனுக்கே மூச்சு வாங்கியது. உடல் அனலாகக் கொதித்தது. அதைக் குளிர்விக்கக் குடம் குடமாய் வியர்த்துக் கொட்டியது. வியர்வை வழிந்து வழிந்து சூரிய வெப்பத்தில் அது காய்ந்ததில் உப்பு உடுப்பில் ஏறியது. அது வெள்ளைப் பட்டையாகத் தெரிந்தது. கண்ணனுக்கு வாயிலிருந்த உமிழ் நீர் வற்றிப் பிசினாக அது நாக்கில் ஒட்டியது. குடிப்பதற்கு நீர் கேட்க முடியாது. பயிற்சியை விட்டும் அசைய முடியாது. ஓட்டம் ஒருவாறு முடிவுற்றது. அதை அடுத்துப் பயிற்சி தொடங்கியது. அவன் வேறு வழியின்றி அதைக் கவனமாகக் கிரகித்துச் செய்யத் தொடங்கினான். கண்ணனுக்கு மேல் மூச்சுக் கீழ் மூச்சு வாங்கியது. மயக்கம் வந்துவிடுமோ என்கின்ற பயம்கூட வந்தது. அதை மேலும் கொடுமையாக்குவது போல ஆதவன் அனலாய் கொதித்து உச்சிக்கு மேல் எழும்பினான்.

உச்சிமீது வானிடிந்து வீழு கின்ற போதினும்,
அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்ப தில்லையே…
என்பது உயிரோடு இருக்கும் போது உலகு மறந்த உண்மையான கவியின் வரிகள். அந்தக் கவிதை வரிகள் போல என்ன நடந்தாலும் பின்வாங்குவதில்லை என்கின்ற ஓர்மத்தோடு அவன் பயிற்சியைச் செய்தான்.

'சுமன் என்ன ஆனான்?' என்கின்ற ஒரு கேள்வி அவன் மனதில் திடீரென உதித்தது.

'சமாளித்து இருப்பானா? சமாளித்து இருப்பான்' என்று மனதைத் திருப்திப்படுத்திக் கொண்டு அவன் தொடர்ந்தும் பயிற்சியைக் கவனித்தான்.

பயிற்சி முடிந்ததும் சுமன் எங்கே என்று தேடினான். அவனை ஒரு இடமும் காணமுடியவில்லை. அப்போது சிவம் தோழரும் பயிற்சி முடிந்து வந்தார். அவரைப் பார்த்ததும்,

'தோழர் சுமனைப் பாத்தீங்களா?'

'இல்லையே… நான் றெயினிங் தொடங்கீனாப் பிறகு அவரைச் சுத்தமாய் கவனிக்க இல்லை. ஏன் நீங்கள் அவரை இடையில காண இல்லையா?'

'இல்லைத் தோழர். அதுதான் கேட்டன்'

'சரி. தேடிப்பாரும். எங்கேயாவது நிற்பார்'

'சரி… நான் தேடிப் பார்க்கிறன்'

'தேடிப்பாரும். கிறவுண்டில இல்லாட்டிச் சில வேளை காம்பிற்குத் திரும்பிப் போய் இருப்பார். அங்க போய் பார்த்தால் ஆளைப் பார்க்கலாம் எண்டு நினைக்கிறன். முதல்ல இங்க பாரும். இல்லாட்டி காம்பிற்குப் போய் பாரும்'

'சரி. நீங்கள் சொல்லுகிறது சரிதான். நான் அப்பிடிச் செய்கிறன். நீங்கள் வாறீங்களா?'

'இல்லை. எனக்கு வயித்துக்க ஒரு மாதிரி இருக்குது. ஒருக்கா வெளிக்குப் போயிட்டு வரவேணும். நீர் முதல்ல முகாமிற்குப் போம்'

'சரி… சரி… நான் போய் பார்க்கிறன்'

கண்ணன் மைதானத்தைச் சுற்றிச் சுற்றி வந்தான். எங்கும் அவனைக் காணவில்லை. மைதானத்தின் சுவர்களாக நின்ற சவுக்கம் தோப்புக்களை ஊன்றிக் கவனித்தான். எங்கும் அவன் கண்ணில் சுமன் தட்டுப்படவில்லை. இனி இங்கு நின்று தேடுவதில் பிரயோசனம் இல்லை என்பது அவனுக்கு விளங்கத் தொடங்கியது. அதனால் அவன் அங்கு மேற்கொண்டு தேடுவதை விடுத்து முகாமை நோக்கிச் செல்லும் தோழர்களோடு முகாமை நோக்கிச் சென்றான். கண்ணன் தன்னை அறியாதே விரைவாக நடந்தான். அவனுக்குச் சுமனைப் பார்த்தால் மட்டுமே நிம்மதி உண்டாகும் என்பது விளங்கியது. பயிற்சி முடிந்தால் தேடி வந்து சொல்லி விட்டுப் போய் இருக்கலாம். எதுவும் கூறாது எதற்கு இப்படிப் போனான் என்பதில் கண்ணனுக்குக் கோபம் வந்தது. கோபம் வந்து என்ன செய்வது? அவன் மிகவும் வேகமாக முகாமை நோக்கிச் சென்றான். முகாமிற்கு வந்தவன் அவர்கள் தங்கும் குடிலுக்கு முதலில் சென்று பார்த்தான். அங்கேயும் அவன் இல்லை. ‘இது என்ன கோதாரி’ என்கின்ற அங்கலாய்ப்பு மேலோங்கியது. நல்ல வேளையாகக் குமரன் அங்கே நின்றான். அவனைக் கேட்டால் ஏதாவது விசயம் தெரிய வரும் என்கின்ற நம்பிக்கையோடு அவனிடம் சென்றான்.

‘சுமனைப் பாத்தீங்களா தோழர்?’ என்றான்.

‘இல்லையே… நான் பார்க்க இல்லையே… எங்க போனான் எண்டு தெரியாதா?’

‘இல்லை. பயிற்சி தொடங்கின பிறகு நானும் கவனிக்க இல்லை’

‘பொறு வாறன். யாரை எண்டாலும் கேட்டாத் தெரியும்’
என்று கூறிய குமரன் வேறு ஒரு தோழரை நோக்கிச் சென்றான்.

‘தோழர்… சுமன் எண்டு புதுசா வந்த தோழரைக் கண்டியளோ?’

‘ஓ… ஓ… அவரைப் பார்த்தம். ஒழுங்கா றெயினிங் செய்யாமல் நல்லா வேண்டிக் கட்டினார். பிறகு தூக்கிக் கொண்டு வந்ததைக் கண்டம். பிறகு எங்கை எண்டு தெரியாது. சில வேளை சிக்காம்பில இருக்கலாம். போய் அங்க பாருங்க’

அதைக் கேட்டதும் குமரன் சிறிது பதட்டமானான். வந்த முதல் நாளே இப்படிப் பிரச்சினை என்றால் இனிப் போகப் போக என்ன நடக்கும்? ஏன் பயிற்சி செய்ய முடியாத இவன் இயக்கத்திற்குப் புறப்பட்டான்? வினாக்கள் விடைகள் இல்லாது அவனது மண்டைக்குள் குடைந்தன.

அவசரமாகத் திரும்பி வந்தவன்,

‘சிக்காம்பில சில வேளை இருப்பான் எண்டு சொல்லுகிறான்’

‘சிக்காம்பா? அதுக்கேன் அவன் போகிறான்? அவனுக்கு என்ன வருத்தமே? இராத்திரி ரொட்டி சாப்பிட்டவன் தானே?’

‘தெரியாது கண்ணன். இப்ப முதல்ல அவனைப் போய் பார்ப்பம்’

‘அவன் அங்க இருக்கச் சந்தர்ப்பம் இருக்காது’

‘நானும் அப்பிடிதான் நினைக்கிறன். எண்டாலும் ஒரு எட்டுப் பார்த்திட்டு வருவம் கண்ணன். அப்ப அந்தச் சந்தேகமும் இருக்காது இல்லையா?’

‘ம்… நீ சொல்லுகிறதும் சரிதான். சரி வா போய் பார்த்திட்டு வருவம். அப்பதான் வேறை எங்யையாவது இருக்கிறானோ எண்டாவது யோசிக்கலாம்’

அதன் பின்பு இருவரும் புறப்பட்டு வருத்தக்காரர்கள் தங்கும் முகாமிற்குச் சென்றார்கள். உள்ளே செல்லும் வரையும் சுமன் அங்கே இருப்பான் என்று கண்ணன் நினைக்கவில்லை. அதைவிட அவன் உடம்பிலிருந்து கசிந்த இரத்த அடையாளங்கள் அவனை மலைகள் வந்து நிஜத்தில் மோதியதாக அதிர வைத்தன. அவன் மறுபக்கம் திரும்பிப் படுத்து இருந்தான். அவனிடம் இருந்து வேதனையால் அனுங்கும் சத்தம் கேட்டது. அதைப் பார்த்த கண்ணனுக்கு அதிர்ச்சியாகவும், கோபமாகவும் இருந்தது. மயக்கம் வந்துவிடும் போலத் தோன்றியது. அவன் அந்த உணர்வுகளைத்

தள்ளி வைத்தான். சுமனை நோக்கி ஓடினான். கண்ணன் மீண்டும் மீண்டும் அதிர்ந்து போனான். சுமனின் முகம் அதைத்துப் போய் இருந்தது. போர்வையை விலக்கிப் பார்த்தவனுக்கு மேலும் அதிர்ச்சியாக இருந்தது. மாட்டிற்குக் குறி சுட்டது போல உடம்பு எங்கும் அடி விழுந்த அடையாளங்கள் புண்ணாகத் தெரிந்தன. கண்ணனால் வேதனையைத் தாங்க முடியவில்லை. அவன் கண்கள் அவனையும் அறியாது நிலை இல்லாது பனித்தன. அவனுக்கு என்ன செய்வது என்றே விளங்கவில்லை. கண்ணனைக் கண்டதும் சுமன் எதுவும் சொல்லவில்லை. அவன் கண்கள் கட்டுப்பாடு இல்லாது பனி மலைகள் கரைவதாகக் கரைந்தன. சிறிது நேரத்தில் அவன் விம்மி விம்மி அழுதான். அவன் அப்படி அழுவதைக் கண்ணனால் பார்க்க முடியவில்லை.

'அழாத சுமன். என்ன நடந்தது? ஏன் இப்படிக் காயம் வந்தது? உன்னை யார் இப்படி அடிச்சது?'

'ஐயோ…' அவன் குலுங்கிக் குலுங்கி அழுதான்.

'அழாத சுமன். என்ன நடந்தது எண்டு சொல்லு'

'சூ… நீ முகாமிற்குப் போ'

'ஏன்?'

'உனக்குத் தேவை இல்லாத பிரச்சனைகள் எதுக்கு? நான் பின்னேரம் இல்லாட்டி நாளைக்கு அங்க வருவன். அப்ப கதைக்கலாம். இப்ப நீ போய் உன்ரை அலுவலைப் பார்'

'அப்பிடியே உனக்குக் காயம் இருக்குது. ஏன் நான் போக வேணும்?'

'இல்லைக் கண்ணன். நீ போ. என்னை எதுவும் இப்ப கேட்காதை'

'என்ன சுமன் இப்பிடிச் சொல்லுகிறா?'

'அது உனக்குப் போகப் போக விளங்கும். நீ இப்ப போ. ஐயோ… தயவு செய்து போ' அவன் முனுகிய வண்ணம் திரும்பிப் படுக்க முயற்சித்தான்.

'உனக்கு என்ன நடந்தது எண்டதைச் சொல்லுகிற வரைக்கும் நான் போக முடியாது'

'இல்லைக் கண்ணன். தேவையில்லாமல் அடம்பிடிக்காத. சுமன் சொல்லுகிறதிலையும் அர்த்தம் இருக்குது. அது உனக்குப் போகப் போக விளங்கும். இப்ப நீ என்னோடை வா. நாங்கள் போவம். காலைமைச் சாப்பாட்டுக்கு விசில் ஊதீட்டாங்கள்'

'தோழர் நீங்களுமா?'

'ம்… இப்ப அமைதியா வாரும்'

'அவனை விட்டிட்டா?'

'ச்… வாரும்'

கண்ணன் கவலையோடு சுமனைப் பிரிந்து சென்றான். என்ன நடக்கிறது என்பது அவனுக்கு முழுமையாக விளங்கவில்லை. விளங்கியமட்டில் இப்படியான ஒரு தமிழ் இராணுவத்திற்கு வருவதாய் அவன் நினைத்து இருக்கவில்லை. நினைப்பது வேறு நடப்பது வேறாக இருக்கலாம். எது எப்படி என்றாலும் இது ஒரு வழிப்பாதை என்பது விளங்கியது. தங்களது குடிலுக்குத் திரும்பி வந்தாலும் மனது அமைதி இல்லாது துடித்தது. சுமனை யார் அப்படி அடித்தார்கள் என்பது விளங்கவில்லை. அதை அறிந்து கொள்ள வேண்டும் என்பது அவனது எண்ணமாக இருந்தது. அதைத் தோழர் சிவம் அல்லது தோழர் குமரனிடம் மட்டுமே கேட்டு அறியலாம் என்பது அவனுடைய எண்ணமாக இருந்தது. கண்ணன் மெதுவாகத் தோழர் குமரன் அருகே சென்றான். சென்றவன் மிகவும் தணிவான குரலில்,

'என்ன நடந்தது தோழர்? யார் சுமனை அப்பிடி அடிச்சது? எதுக்காக அவனை அப்பிடி அடிச்சிருக்கினம்? தயவு செய்து சொல்லுங்க தோழர். இல்லாட்டிப் பைத்தியம் பிடிச்சிடும் போல இருக்குது. இதை நானோ அவனோ எதிர்பார்க்க இல்லை'

'பயிற்சி எண்டு வந்தா பயிற்சி செய்ய வேணும். அதில யாருக்கும் எந்தச் சலுகையும் இங்க கிடைக்காது. இங்க வந்த பிறகு உழவுக்குப் பயந்த கள்ள நாம்பனாட்டம் படுக்க நினைச்சா இப்பிடித்தான் அடி வேண்ட வரும். கழகத்திற்கு வெளிக்கிட்டு வரேக்கையே சுகபோக வாழ்க்கை பற்றின எந்த எண்ணமும் இருக்கக் கூடாது.

அப்பிடியான எண்ணம் இல்லாட்டி எந்தப் பிரச்சனையும் இருக்காது. கழகம் கஸ்ரப்பட்டுத்தான் எங்களுக்குச் சாப்பாடு, தங்குகிற இடங்கள், தேவையான உபகரணங்கள் எல்லாவற்றையும் சேர்த்து பயிற்சி தருகுது. அதை நாங்கள் துஷ்பிரயோகம் செய்கிறது எண்டா ஒழுங்காப் பயிற்சி செய்யாமல் இருக்கிறதாகத்தான் இருக்கும். அப்படிச் செய்தால் அவங்கள் இப்பிடிதான் அடிப்பாங்கள். அதில அவங்களை யாரும் குறை சொல்ல முடியாது'

'என்ன கதைக்கிறீங்கள் தோழர்? நாங்கள் என்ன அரச இராணுவத்திற்கே வந்து இருக்கிறம்? நாங்கள் விடுதலைக்காக ஒரு விடுதலை இயக்கத்திற்கு விரும்பி வந்து இருக்கிறம். இங்க நாங்கள் எல்லாரும் சமனான தோழர்கள் தானே? தோழர் எண்டுகிறவையே தோழரை அடிப்பினமா? அது இங்க நடக்குமா தோழர்? அதைக் கழகம் அனுமதிக்குமா? என்னால இதை நம்ப முடியாமல் இருக்குது. ஒரு விடுதலை இயக்கம் எண்டுகிறதே தோழரை அடிமையா நடத்துமா? பயிற்சி செய்ய முடியாட்டி அவங்களை அடிக்கிறது அதுக்கு பதிலாகுமா? அப்படி எண்டா இது என்ன விடுதலைக்கான போராட்டம்? நிலத்தை மாத்திரம் விடுவிக்கிறதுதான் விடுதலையா? அப்படி ஒரு விடுதலை எங்களுக்குத் தேவையா? இதை என்னால ஏத்துக் கொள்ள முடியாது. இதுதான் இயக்கம் எண்டா நான் உடனடியாகத் திரும்பி ஊருக்குப் போக வேணும்'

'இப்படி நீர் கதைக்கிறது எண்டா நான் போகிறன். இங்க உள்ள நிலைமை தெரியாமல் நீர் கதைக்கிறீர். உம்மோடை சேர்ந்து நானும் மாட்டுப்பட விரும்ப இல்லை. நாங்கள் இயக்கத்திற்கு வந்தாச்சுது. பயிற்சியைக் கெட்டித்தனமாய் செய்து நாட்டுக்காக எவ்வளவு சிறப்பாகப் போராட முடியமோ அவ்வளவு சிறப்பாகப் போராட வேணும். அதைவிட்டிட்டு தேவையில்லாத கதை கதைச்சுத் தேவையில்லாத இடங்களில வதை படுகிறது புத்திசாலித்தனம் இல்லை. இதை முதல்ல தெளிவா விளங்கி வைச்சிரும். நீங்கள் தேவையில்லாமல் மாட்டுப்படுகிறதோடை மற்றவையையும் தேவையில்லாமல் இழுத்து விடாதையுங்க'

'என்ன நீங்கள் இப்பிடிக் கதைக்கிறியள்?'

'நிலைமையை விளங்கிக் கொள்ளுங்க தோழர்… கழகத்தில என்ன நடக்குது எண்டு உங்களுக்கு விளங்க இல்லை எண்டு நினைக்கிறன். தேவை இல்லாமல் நீங்களும் சிக்கலில மாட்டிக் கொள்ளாதீங்க. நீங்கள் உங்கடை அலுவலைப் பாருங்க. சுமன் கொஞ்சம் கொஞ்சமா நிலைமையை விளங்கிக் கொள்வார். அதை விட்டிட்டு சுமனுக்கு உதவி செய்கிறம் எண்டு நினைச்சுக் கொண்டு உங்கடை கழுத்தில நீங்களே சுருக்குக் கயிறு மாட்டிக் கொள்கிறது புத்திசாலித்தனம் இல்லை. தத்துவங்கள், கொள்கைகள் போன்றவற்றிற்கும் நடைமுறைக்கும் நிறைய வித்தியாசம் இருக்கும். அதை விளங்கிக் கொண்டு நடக்க வேணும். தவளை மாதிரிக் கத்தினா உங்களை நீங்களே காட்டிக் குடுக்கிற மாதிரி இருக்கும்?'

'விளங்குது தோழர்? இருந்தாலும் இதை நான் கனவிலும் எதிர்பார்க்க இல்லை. நினைச்சு வந்தது வேறை. இங்கத்தே நடைமுறை வேறை'

'விளங்குதுதானே? அதுக்கேத்த மாதிரி நடவுங்க. சுமனை மாதிரி நடந்தா உங்களுக்கும் அதே நிலைமைதான்'

'இதயம் இல்லாத விடுதலை இராணுவம் எண்டுறியள்'

'போராட்டத்தில வெல்ல வேணும் எண்டா வேற வழி இல்லை. அதை நாங்களும் விளங்கிக் கொள்ள வேணும். இராணுவம் எண்டா அது எந்த இராணுவம் எண்டாலும் இப்பிடிதான்'

தோழர் குமரனும் கண்ணனும் கதைத்துக் கொண்டு இருக்கும் போது தோழர் சிவம் தான் சென்ற அலுவல்களை முடித்துக் கொண்டு மீண்டும் அங்கே வந்தார். அங்கே வந்த அவருக்குச் சுமனைக் காணவில்லை என்பது சற்று வியப்பாக இருந்தது. அதனால் தோழர் சிவம் கண்ணனைப் பார்த்து,

'சுமன் எங்க? ஏன் இன்னும் அவன் இங்க வர இல்லை?' என்றார்.

'தோழர் சிவம் அதைத்தான் நாங்களும் கதைச்சுக் கொண்டு இருந்தம். எது நடக்கக் கூடாது எண்டு நாங்கள் நினைக்கிறமோ அதுதான் இங்க வழக்கம் எண்டு தோழர் குமரன் சொல்லுகிறார். எனக்கு இது பெரிய அதிர்ச்சியா இருக்குது. உண்மையில இதை என்னால கொஞ்சமும் ஏற்றுக் கொள்ள முடிய இல்லை. தோழர் எண்டாத் தோழர் தானே? தோழமையில என்ன பாகுபாடு? விடுதலை இல்லை யுத்தம்தான் எங்களுக்கான விடிவு எண்டாப் பிறகேன் நாங்கள் இதுக்கு வாறம்? நீங்க சொல்லுங்க?'

‘கண்ணன் நீங்கள் சொல்லுகிறது ஒண்டும் விளங்க இல்லை. என்ன நடந்தது? ஏன் நீங்கள் இப்பிடிக் கதைக்கிறியள்?’

‘அதுக்குக் காரணம் இருக்குத் தோழர் சிவம். சுமன் ஒழுங்காப் பயிற்சி செய்ய இல்லை. காலமை பயிற்சியில ஓடியே இருக்க மாட்டான் போல. அவங்கள் சாதுவா வாட்டி எடுத்து இருக்கிறாங்கள். அதால அவனை வருத்தக் காரருக்கான முகாமில படுக்க விட்டிருக்கிறாங்கள். கெதியாத் திருப்பி இங்க அனுப்பி விடுவாங்கள். அதைக் கேட்டதில இருந்து தோழர் கண்ணன் கொதிக்கிறார். ஆனால் இந்தக் கொதிப்பு அவருக்கு நன்மையா இருக்காது எண்டு ஏன் விளங்குது இல்லை?’

‘ஓ... அப்பிடியே தோழர். கண்ணன் நீர் கொஞ்சம் பொறுமையா இரு. அவதானமாய் கதை. பயிற்சிக்கு எண்டு வந்திட்டுப் பயிற்சி செய்ய முடியாது எண்டா அவங்கள் விடமாட்டாங்கள். அதைப் பிழை எண்டும் முழுமையாகச் சொல்ல முடியாது. இப்பிடி ஒரு இயக்கத்தை நடத்துகிறது எவ்வளவு கஸ்ரம் எண்டு எல்லாம் உங்களுக்குச் சொல்லிக் கொண்டு இருக்கத் தேவையில்லை. அதை விளங்காமல் பயிற்சி செய்ய முடியாது எண்டாக் கொஞ்சம் கடுமையாகத்தான் இருப்பாங்கள்’

‘என்ன தோழர் சிவம்... நீங்களும் இப்பிடிக் கதைக்கிறியள்?’

‘அதுதான் நடைமுறை தோழர் கண்ணன். நல்லா விளங்கிக் கொள்ளுங்க. தேவையில்லாத பிரச்சனையில மாட்டுப்படாதேங்க’

‘இது என்ன போராட்டம்?’ என்றான் கண்ணன்.

‘இதுவும் போராட்டம்தான். இதைவிட மோசமாகவும் இது நடக்கலாம்’ என்றார் தோழர் சிவம்.

கண்ணன் அதற்கு மேல் தொடர்ந்து கதைக்கவில்லை. அவன் மனது வேதனையில் வெந்தது. கழகத்திற்கு வந்தால் ஒழுங்காகப் பயிற்சி செய்ய வேண்டும் என்பதிலோ ஒழுங்காகப் போராடத் தயாராக வேண்டும் என்பதிலோ அவனுக்கு எந்தவித சந்தேகமும் இல்லை. ஆனால் தோழர் என்கின்ற அடிப்படையே நழுவும்போது அதை அவனது மனது ஏற்றுக் கொள்ள மறுத்தது. தோழர் என்பவன் மீது தோழர் என்பவனே அத்து மீறிக் கைவைப்பது? உடலில் காயம் வருவது போலத் தண்டிப்பது ஒரு அரச இராணுவத்திற்கு வந்ததான உணர்வையே அவனுக்கு உண்டு பண்ணியது. கழகத்தின் போராட்டத்தில் தோழர்களுக்குச் சமவுரிமை கிடையாது என்பது அப்பட்டமாய் தெரிகிறது. அப்படி என்றால் தோழர்களுக்குக் கொடுக்க முடியாத சமவுரிமையை இவர்கள் எப்படி மக்களுக்குக் கொடுப்பார்கள்? இவர்களால் அப்படி எதையாவது கொடுக்க முடியுமா? மனைவிக்குக் கொடுக்காத உரிமையை மகளுக்குக் கொடுக்க முடியுமா? கொடுப்பது என்றால் யாவருக்கும் அந்த உரிமை கொடுக்கப்பட வேண்டும். இல்லை என்கின்றபோது அங்கே சர்வாதிகாரம் கருக் கொள்கிறது. அப்படி என்றால் இங்கே என்ன நடக்கிறது?

சுமனை எண்ண எண்ணக் கண்ணனுக்குக் கவலையாக இருந்தது. இயக்கத்திற்கு என்று வந்தாகிற்று. பின்பு பயிற்சி செய்யப் பின்வாங்கக் கூடாது. அப்படிப் பின்வாங்குவது வந்த நோக்கத்திற்குக் கழகத்தின் எண்ணத்திற்கு என்று எல்லாவற்றிற்குமான நம்பிக்கையைச் சிதைப்பதாக இருக்கும். சுமன் அப்பிடிச் செய்யாது இருந்து இருக்கலாம். அவன் வேண்டும் என்று செய்திருக்கமாட்டான். அவன் வந்த அன்றே சாப்பாடு அவனுக்கு ஒத்துக் கொள்ளவில்லை. சாப்பாடு ஒத்துக் கொள்ளாது அவனைப் பலவீனப்படுத்தி விட்டது. அதன் பின்பு கொடுக்கப்பட்ட கடுமையான பயிற்சியை அவனால் செய்ய முடியாது போனதில் அதிசயம் ஒன்றும் இல்லை. அதற்காக அவனைத் தண்டிப்பது எந்த வகையில் மனிதாபிமானமாகும்? தமது சொந்தத் தோழர்களுக்கே மனிதாபிமானம் காட்ட முடியாத ஒரு கழகமும் அதன் அங்கத்தவர்களும் மக்களுக்கு எப்படி அதைக் காட்டுவார்கள்? மனிதாபிமானம் அற்றவர்கள் போராடி மக்களுக்கு என்ன கிடைக்கும்? மனிதாபிமானம் அற்றவர்களால் உண்மையில் போராட முடியுமா? போராட்டம் என்பது தத்துவ வார்த்தைகளில் புதைந்து இருக்கும் கனவு மட்டும்தானா? கண்ணனின் மனம் அமைதி இன்றித் தவித்தது. சரி பிழை என்று மனதிற்குப் பட்டதைச் சொல்லி விடலாம். ஆனால் இந்த உலகில் எதுவும் சரியாகவோ அல்லது பிழையாகவோ நிரந்தரமாக இருந்து விடுவதில்லை. அது பாத்திரத்தில் ஏந்தப்படும் நீர் போல. என்றாலும் மீண்டும் அவன் மனது வேறு வழி இன்றி பூச்சியத்தில் வந்து நின்றது.

# 5.

தொடர்கதை

சுமனிற்கு மாத்திரம் அன்று மதிய வேளைப் பயிற்சிக்கு விலக்கு அழிக்கப்பட்டு இருந்தது. அதற்கு வருத்தக்காரர்களைப் பார்க்கும் மருத்துவர் என்பவர் காரணமாய் இருந்தார் என்பதைக் கண்ணன் பின்பு அறிந்து கொண்டான். மற்றவர்களுக்கு மதியம் பயிற்சி இருந்தது. அது நீண்ட நேரமாக இருக்கவில்லை என்பது, பலருக்கு ஆறுதல் தந்தது. அந்த ஒரு மணித்தியாலப் பயிற்சியில் இராணுவ யுக்திகளும் அதற்கான உடற்பயிற்சிகளும் வழங்கப்பட்டன. கண்ணனுக்கு அது மிகவும் கடினமாக இருக்கவில்லை. இருந்தாலும் சவுக்கம் காட்டு வெப்பம் மிகவும் கொடுமையாக இருப்பதாய் அவன் உணர்ந்தான். அந்தப் பயிற்சிகள் களத்தில் மிகவும் உதவியாக இருக்கும் என்பதில் கண்ணனுக்கு எள்ளளவும் ஐயம் இருக்கவில்லை. அனேகர் அதை ஆர்வத்தோடு கடுமையாகச் செய்வதையும் அவன் அவதானித்தான். அதனால் மகிழ்ச்சியாகவே அந்தப் பயிற்சிகளைச் செய்ய முடிந்தது. பயிற்சிகள் முடிவடைந்த பின்பு தோழர் சிவம் வந்து கண்ணனைப் பார்த்து,

'தோழர் குளிக்கப் போவமா?' என்று கேட்டார்.

'போவம் தோழர். சுமன் என்ன செய்வானோ தெரியாது'

'அவரை விடுங்க தோழர். நாங்கள் கூட்டிக் கொண்டு போனா அவரைப் பின்னேரம் பயிற்சிக்கு அனுப்புவாங்கள். அந்த விசப்பரீட்சை எங்களுக்கு எதுக்குத் தோழர்? அவன் ஓய்வெடுக்கட்டும். உடம்பைத் தேற்றட்டும். ஒழுங்காப் பயிற்சியைச் செய்யட்டும். பிறகு எங்களோடை கூட்டிக் கொண்டு திரியலாம்'

'ம் நீங்கள் சொல்லுகிறது உண்மை. அப்ப நாங்கள் மாத்திரம் போய் குளிச்சிட்டு வருவம்'

'அதைத்தான் நான் சொல்கிறன் தோழர்'

அதன் பின்பு இருவரும் முகாமிற்குச் சென்று உடுப்பு, சவர்க்காரம் போன்றவற்றை எடுத்துக் கொண்டு ஆற்றிற்குக் குளிக்கச் சென்றார்கள்.

அன்று ஆற்றில் அதிக வெள்ளம் இல்லை என்றாலும் வைரம் போன்று மிளிரும் தெளிவு அதிலிருந்தது. சூரிய ஒளி பட்டுத் தெறிப்பதைப் பார்க்கக் கண்கள் கூசின. ஓடும் நீர் ஆதலால் குளிர்மை பூண்டு உடலிற்கு இதம் தந்தது. ஆற்றில் சில இடங்களில் ஆழமாகவும் சில இடங்களில் மணல் ஏறிப் பிட்டியாகவும் இருந்தது. ஆழமான இடம் பார்த்துக் கண்ணனும் தோழர் சிவமும் இறங்கிக் குளித்தார்கள். அப்போது கண்ணன் மனதில் நெளிந்த சந்தேகப் புழுக்கள் வெளியே வரத் துடித்தன. அதனால் அவன்,

'தோழர். நான் ஒண்டு உங்களிட்டைக் கேட்கலாமா?' என்று தொடங்கினான்.

'ஏன் இப்பிடிப் பீடிகை போடுகிறீர். கேட்க வந்ததைக் கேழும்'

'இல்லை… அநியாயம் நடக்கிற போது அதைப் பார்த்துக் கொண்டு பேசாமல் இருக்கிறியள். பேசாமல் இருக்க வேணும் எண்டு மற்றவைக்கும் சொல்லுகிறியள். அது எப்பிடி ஒரு நியாயமான போராடுகிற குணத்திற்கு ஒத்து வரும்? போராட்டம் எண்டாலே அநியாயத்திற்கு எதிராகக் குரல் கொடுக்கிறதும், உரிமையை, சுதந்திரத்தை மீட்டு எடுக்கிறதும் இல்லையா? அந்தக் குணங்களை எல்லாம் ஒதுக்கி வைச்சிட்டு இப்பிடி மௌனமா இருக்கிறதை மனது எப்பிடி ஏற்றுக் கொள்ளும்? இதை நீங்கள் போராளிகளுக்கான குணமா ஏற்றுக் கொள்ளுகிறியளா?'

'முதல்ல போராட்டம் எதிரிகளோடு மட்டும்தான் எண்டதையும் தோழர்களோடே இல்லை எண்டுகிறதையும் முழுமையாக விளங்கிக் கொள்ள வேணும். இங்க தேவை இல்லாமல் எதிர்த்துக் கதைக்கிறதால எங்களுக்கு உள்ள நாங்களே போராடுகிற மாதிரி இருக்கும். அது சரியா? நான் எல்லா இடத்திலும் எல்லா விசயங்களும் நியாயமா நடக்கும் அல்லது நடக்குது எண்டு சொல்ல வரேல்லை. சில வேளை பொதுவான நன்மைக்காக நாங்கள் சில உரிமை மீறல்களை, தப்புக்களைக் கண்டும் காணாமல் இருந்து கொள்ளத்தான் வேணும். அப்பிடிதான் இதுவும்'

'இதுகளை என்னால ஏற்றுக் கொள்ள முடியாமல் இருக்குது தோழர் சிவம். நியாயம் எண்டுகிறது எதுக்கும் வளைஞ்சு போகிறது இல்லை. வளைய நினைச்சாலே நாங்கள் அநியாயத்திற்கு அடிபணிஞ்சிட்டம் எண்டுதான்

அர்த்தம். இல்லையா தோழர்? அநியாயம் என்ன வடிவில எந்த அளவில நடந்தாலும் அதைத் தட்டிக் கேட்க வேண்டாமா? அப்பிடிக் கேட்காமல் விட்டால் அதுவே பெரிய பெரிய தவறுகளுக்கு காரணமாகிடும் எண்டு நினைக்க இல்லையா நீங்கள்?'

'ஒரு விசயத்தைப் பல கோணத்தில பல மாதிரிச் சிந்திக்கலாம். தற்போதைக்கு முகாம் ஒழுங்கா இயங்க வேணும் எண்டாப் பொறுப்பாளர் தொடக்கம் ஒவ்வொரு தோழர் வரையும் ஒற்றுமையா, ஒரு திசையில பயணிக்க வேணும். அதில எந்தத் தடுமாற்றமோ, மாற்றுக் கருத்தோ இருக்கக் கூடாது. அதே பயணிப்பு எதிரியை நோக்கியும் தொடர வேணும். போராட்டம் வெற்றி பெற்றால் மீதம் வரவேண்டிய உரிமைகள் எல்லாம் வந்து சேர்ந்திடும். குற்றம் பார்த்தால் சுற்றம் இல்லை எண்டுகிற மாதிரி இதைக் கொஞ்சம் துர நோக்கோடை பார்க்க வேணும்'

'துர நோக்கு வேற மாதிரி இருக்கும் தோழர். முதல்ல சிங்கள இராணுவத்திற்கு எதிராக எல்லாரும் போராடுவினம். பிறகு தமிழ் இராணுவத்திற்கு எதிராய் தமிழ் மக்கள் போராட வேண்டி வரும். இந்த அநியாயங்களை இப்ப தட்டிக் கேட்காட்டி அப்பிடிதான் கடைசியில இது வந்து முடியும்'

'கண்ணன் நீர் சொல்லுகிறதை முழுமையா என்னால மறுக்க முடியாது. எண்டாலும் நீர் இங்க அமைதியாக இருக்க வேணும். அதுக்கு நான் இப்ப கூறின காரணங்களோடை அதைவிட வேற சில, பல காரணங்களும் உண்டு. எல்லாத்தையும் இப்ப வெளிப்படையாகக் கதைக்க முடியாது. அதால யாருக்கும் எந்தவித நன்மையும் இப்ப வரப் போகிறது இல்லை. இதுகளை எல்லாம் விளங்கிக் கொண்டு அமைதியாக வந்த காரியத்தில கண்ணாய் இருக்கிறது புத்தி எண்டுகிறது என்னுடைய கருத்து'

'அது என்ன சில பல காரணங்கள் தோழர்?'

'சில விசயங்களை அறியாமல் அறிய முயலாமல் இருக்கிறது எல்லாருக்கும் நன்மையாக இருக்கும். மனித வாழ்க்கையில சில நேரங்களில இதைக் கடைப்பிடிக்கத்தான் வேணும்'

'என்ன சொல்ல வாறியள் தோழர் சிவம்?'

'என்ரை வாயைப் பிடுங்காதையும் தோழர் கண்ணன்'

'தோழர் நீங்கள் எல்லாத்தையும் வெளிப்படையாகச் சொன்னால்தானே நாங்கள் அதுக்கேத்த மாதிரி நடந்து கொள்ளலாம். புதிசா வந்திருக்கிற எங்களுக்கு நீங்கள் தானே வழிகாட்ட வேணும்?'

'நீர் மற்றவையின்ரை வாயைப் புடுங்கிறதிலை கெட்டிக்காரன் எண்டதில எனக்கு எந்தச் சந்தேகமும் இல்லை'

'சொல்லுங்க தோழர். நீங்கள் சொல்லுகிறதாலதான் மற்றைய தோழர்களைத் தப்பாகப் போகாமல் காப்பாற்ற முடியும். கதைக்காமல் மௌனமாப் பயங்காட்டிக் கொண்டு இருக்கிறது நல்லது இல்லைத் தோழர்'

தோழர் சிவம் பேச்சு இழந்தவராய் ஏதோ யோசித்துக் கொண்டு இருந்தார். கண்ணனுக்குச் சலித்துவிட்டது. இனி எதைப் பற்றியும் கேட்கக் கூடாது என்று எண்ணிய வண்ணம் ஆற்று நீரில் நன்றாக மூழ்கினான். மூழ்கி மீண்டும் எழுந்த போது தோழர் சிவம் கண்ணனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டு நின்றார். பின்பு அவனைப் பார்த்து,

'கண்ணன் போவமே?' என்றார்.

'போவம். இல்லாட்டி விசில் அடிப்பாங்கள் எண்டு உங்களுக்குப் பயமா இருக்குதா தோழர்'

'அது என்னவோ உண்மைதான். அதுக்கும் பல காரணங்கள் இருக்குது. உள்ள வந்தவங்கள் வெளியால போய் உள்ளே உள்ள விசயங்களை வெளியால சொல்லிடுவாங்களோ எண்டுகிற பயம் அவங்களுக்கு. அது இயக்கத்துக்கு நல்லது இல்லை எண்டுகிறது உண்மை. அந்த ஆபத்து அரசாங்கத்தாலும் வரலாம். மற்றைய இயக்கங்களாலும் வரலாம். இந்தியாவாலும் வரலாம். அப்பிடி அனுப்பி வைக்கப்பட்டவங்கள் தப்பி ஓடுவாங்கள் எண்டுகிற ஒரு அவிப்பிராயம் பொதுவா இருக்குது. அதால கணக்கில கவனமாக இருப்பினம். அதைக் குறை சொல்ல முடியாது. ஆனாலும் இந்த நேரத்தில எல்லாம் கணக்குப் பார்க்கிற வழமை இல்லை. நீர் அவசரப்படாமல் மேல வாரும். சண்டைக்குப் பிந்தினாலும் சபைக்குப் பிந்தக் கூடாது எண்டதைக் கடைப் பிடிக்க வேணும். இண்டைக்கு எங்கயோ குளத்து மீன் வாங்கி வந்தவங்கள் எண்டு கேள்வி. சாப்பாடு நல்லா இருக்கும். அதுதான் முந்திக் கொள்ளுகிறது புத்திசாலித்தனம் எண்டு நினைக்கிறன்'

'அப்பிடியே தோழர் சங்கதி? இருந்தாலும் இவங்கள் துளுக்குப் பதிலா மஞ்சள் துளைப் போட்டுக் கறி வைக்கிறாங்களோ தெரியாது'

'இல்லைத் தோழர். ஸ்ராலின் இண்டைக்குச் சமையல் பொறுப்பு. அவன் நல்லாச் சமைப்பான். வாங்க போவம்'

அன்று மத்தியான சாப்பாடு நன்றாகவே இருந்தது. ஊரில் சாப்பிடும் அல்லது இடையில் தங்கிய வீடுகளில் சாப்பிட்ட மீன் குளம்பிற்கும் குத்தரிசிச் சோற்றிற்கும் இணையாக இல்லாவிட்டாலும் முகாமில் சாப்பிட்ட சாப்பாட்டிற்கு அது தேவாமிர்தமாகவே இருந்தது.

மாலைப் பயிற்சிகள் இராணுவ யுத்திகளைப் பயிற்றுவிப்பதாகவே இருந்தன. அதற்கும் சுமன் வரவில்லை. அவனை எண்ணும் போது கண்ணனுக்குக் கவலையாக இருந்தது. இருந்தாலும் அவன் நன்றாக உடலைத் தேற்றிக் கொள்ளட்டும் என்று சமாதானம் செய்து கொண்டான். மாலைப் பயிற்சி முடிந்ததும் தோழர் சிவம் கண்ணனைப் பார்த்து,

'நாங்கள் வாய்க்காலுக்குப் போய் மேல் கழுவிக் கொண்டு வருவம் தோழர். அப்பத்தான் நிம்மதியாய் நித்திரை கொள்ளலாம்' என்றார்.

'அதுக்கு என்ன தோழர்… நல்லாப் பசிக்கவும் தொடங்கீட்டுது. வீட்டை நினைக்கக் கவலையாகவும் இருக்குது. இப்பிடி எவ்வளவு காலம்…?'

அதைக் கூறும் போது கண்ணனின் கண்கள் கலங்கிக் குரல் உடைந்து போயிற்று. இது கண்ணனுக்கான உணர்ச்சி மட்டும் அல்ல… முகாமில் பயிற்சி செய்ய வந்து இருக்கும் ஒவ்வொரு தோழர்களின் உணர்ச்சியும் அப்படியே இருக்கிறது என்பது தோழர் சிவத்திற்கு நன்கு தெரியும். விடுதலை என்பது தியாகம் என்கின்ற உரத்தில் மட்டுமே செழிக்க முடியும். அந்த அர்ப்பணிப்பிலிருந்து யாரும் விடுதலை பெற்றுவிட முடியாது. அதிலிருந்து யாரும் பொறுப்புத் துறந்து போகவும் முடியாது. அதுவே ஒவ்வொரு போராளியினதும் ஆரம்ப அர்ப்பணிப்பாக, தியாகமாக இருக்கிறது. இருக்க வேண்டும்.

'தோழர் இதுக்காக எல்லாம் கவலைப்படக் கூடாது. எல்லாத் தோழர்களுக்கும் உறவுகள் இருக்கினம். உறவைப் பெரிதுபடுத்தினால் யாராலும் போராட வெளிக்கிட முடியாது. நாங்கள் செய்ய வெளிக்கிட்ட தியாகத்தோடே ஒப்பிடும் போது இந்த விசயங்களை எல்லாம் சின்ன விசயமா நினைச்சுப் புறம் தள்ளிக் கொண்டு போக வேணும்'

'வாயால அதை லேசாச் சொல்லாம் தோழர். எண்டாலும் அதை அனுபவிக்கிறது நீங்கள் நினைக்கிற மாதிரி லேசில்லை. அதுக்காக நான் வந்த இலட்சியத்தை எந்த வகையிலும் விட்டுக் கொடுக்க போகிறன் எண்டு அர்த்தம் இல்லை. அதில எனக்கு எந்தத் தடுமாற்றமும் கிடையாது'

'அது நல்லது. என்ன நடந்தாலும் நாங்கள் வந்த இலட்சியத்தை எதற்காகவும் இம்மிய அளவும் மறக்கக் கூடாது'

'அதில பலரும் தெளிவாகத்தான் இருக்கினம்'

'உண்மைதான் தோழர் கண்ணன். வாங்க வாய்க்காலுக்குப் போவம்?'

இருவரும் புறப்பட்டு வாய்க்காலை நோக்கிச் சென்றார்கள். தோழர் சிவம் வாய்க்காலில் முன்பாகச் சிறிது தூரமாகக் கூட்டிச் சென்றார். ஏன் இப்போது இவ்வளவு தூரம் கூட்டிச் செல்கிறார் என்பது கண்ணனுக்கு விளங்கவில்லை. என்றாலும் அதைப் பற்றி முதலில் அவரோடு ஆட்சேபிக்காது நடந்தான். அப்படிச் சிறிது தூரம் நடந்தவன் பின்பு அதைப் பொறுக்க முடியாதவனாய்,

'என்ன தோழர் முகம் கழுவ எத்தின மையில் போகிறதா உத்தேசம்? எங்க போனாலும் எல்லாம் நடந்த தண்ணிதான் வரப்போகுது. அசுத்தம் இல்லாத நீர் எண்டால் நாங்கள் மனிசர் இறங்கிக் குளிக்காத கிணறு தேடிச் செல்ல வேணும்'

'அவசரப்படாதையும் கண்ணன். பகலில பக்கம் பார்த்துப் பேசு… இரவில அதுவும் பேசாத எண்டுவினம்'

‘அது இரகசியம் கதைக்கிறவைக்குத் தோழர். நீங்கள் எதுவும் சொல்லமாட்டியள். பிறகு எதுக்கு இந்தப் பயணம்?’
‘அப்படி இல்லைக் கண்ணன். தேவையில்லாத விசயங்களைக் கதைச்சு தேவை இல்லாத பிரச்சனையில மாட்டுப்படக் கூடாது. எனக்குச் சில விசயங்கள் தெரியும். ஆனால் அதை எல்லாம் கதைச்சால் அவங்கள் என்னையும் சந்தேகப்படலாம். அப்பிடிச் சந்தேகம் வந்தால் அதுகின்ரை விளைவு கொடுமையா இருக்கும். புத்திசாலியாப் பிழைச்சுக் கொள்ள வேணும் எண்டா அதுகளுக்க எல்லாம் தேவையில்லாமல் தலையிடக் கூடாது. முதல் கதைக்கிறதில கவனமாய் இருக்க வேணும். இந்த வாயால மாட்டுப்பட்டவை பலர். அதில சிலர் அந்த மண்வீட்டுக்க சாக கிடக்கிறவை’

சிறிது மௌனமாய் இருந்த தோழர் சிவம் மீண்டும் பேசத் தொடங்கினார்.

‘ம்… அது எல்லாம் மனவருத்தமான விசயம்தான். அரசியல் பிரச்சினையால கைதாகி வந்தவைதான் அதுக்குள்ள இருக்கினம். அதுக்கு உள்ள இருக்கிறவையோடை கதைச்சாலோ அல்லது அதைப் பற்றி நாங்கள் கதைச்சாலோ தேவையில்லாத சிக்கலில மாட்டுப்பட வேண்டி வரும். அதால நானும் உங்களோடை அதைப்பற்றிக் கதைக்க விரும்ப இல்லை. நீ நினைக்கிற மாதிரி எல்லா நடை முறையும் இங்க சரியா நடக்குது எண்டு சொல்ல முடியாது. தோழரைத் தோழன் எண்டுகிறவனே அடிக்கக் கூடாது என்கிறதிலை எந்த மாற்றமும் இல்லை. ஆனால் அரசியல் கதைச்சு இயக்கத்தையே உடைக்கிறாங்கள் எண்டு தலைமை குற்றச்சாட்டு வைச்சு அவங்களுக்கு எதிராக நடவடிக்கை எடுக்கிற நேரம் நாங்கள் என்ன கதைக்க முடியும்? தலைமையே அப்படி எதிர்க்கிறவையை அடக்க வேணும் எண்டு நினைச்சதால அது இப்ப பல இடத்திலும் பரவி இருக்குது. அதிகின்ரை பாதிப்பையே சுமனும் இப்ப அனுபவிச்சான். இயக்கத்தில பிரச்சனைக்குக் கொலையும் வன்முறையும் தண்டனையா இருக்கிறது ஒண்டும் புதிசு இல்லை. நீர் அறிஞ்சு இருக்கிறீரோ இல்லையோ தெரியாது. ஆனா இது ஆரம்பத்தில இருந்து இருக்குது. கொலை ஒண்டும் ஈழப் போராட்டத்திற்கு புதுசு இல்லை. இயக்கம் பிறக்க அதுவும் கூடவே பிறந்திட்டுது. அந்தக் கலாச்சாரத்தின் பாதிப்பே இப்ப பயிற்சி செய்ய இயலாமல் இருக்கிற தோழர் மேலையும் வன்முறையாக எந்தக் கூச்சமும் இல்லாமல் பாயிது.

ஆனாலும் உதைப்பற்றி இங்க கதைக்கக் கூடாது. கதைச்சா கதைக்கிறவையையும் மண்வீட்டிலயே வைப்பினம். மண்வீட்டில வைச்சா அதுக்குப் பிறகு எங்கடை வாழ்க்கை முழுமையாக எங்கடை கையில இருக்காது. நாங்கள் எங்கடை இனத்தின்ரை விதியை மாத்த வேணும் எண்டு இங்க வெளிக்கிட்டு வந்து இருக்கிறம். ஆனால் சில வேளை இங்க எங்கடை விதியையே எங்களால மாத்த முடியாமல் இருக்கும். அப்படியான ஒரு இக்கட்டான நிலைக்குள்ள நாங்கள் இங்க அகப்பிடக் கூடாது. அதால அரசியல் கதைக்கிறதோ மண்வீட்டைப் பற்றி ஆராய்கிறதோ எங்களுக்கு நல்லது இல்லை. இப்ப எல்லாத்தையும் சந்தேகக் கண்ணோடையே பார்க்கிறாங்கள். அதுக்க நாங்கள் தேவையில்லாமல் மூக்கை நுழைச்சா எங்களையும் இயக்கத்தைக் குழப்ப வந்தவங்களாக பார்ப்பாங்கள். அவங்கள் பயப்பிடுகிறதிலையும் ஒரு நியாயம் இருக்குது எண்டும் சொல்லலாம்.

இயக்கத்தை அழிக்கிறதுக்கு எப்பிடி ஆபத்து வரும், யாரால அந்த ஆபத்து வரும் எண்டது யாருக்கும் தெரியாது. அதால இருண்டவன் கண்ணுக்கு மருண்டது எல்லாம் பேய் எண்ட மாதிரி எல்லாரிலும் சந்தேகம் பாயுது. வேறை இயக்கம், இலங்கை அரசு, றோ எண்டு அவங்களால அனுப்பப்பட்ட யாரும் இயக்கத்திற்கு உள்ள நுழையலாம். தகவல்களை எடுத்துக் கொண்டு வெளிய போகலாம். அல்லது முகாமிற்கையே கலகத்தை உண்டு பண்ணலாம். கொலை செய்யலாம். அது எல்லாப் போராட்டங்களிலையும் நடக்கிறது. எங்கடை போராட்டத்தில அது இன்னும் அதிகமா இருக்குது. போராட்டம் எண்டால் இது எல்லாம் தவிர்க்க முடியாது எண்டு சமாதானம் சொல்லலாம். ஆனா அதை நேரடியாக அனுபவிக்கிறது கொடுமையானது. அதிகின்ரை உச்சக்கட்டமே தோழரைத் தோழர்களே சந்தேகப்படுகிறது. லெனின், ஸ்ராலின் தொடக்கம் எல்லாருக்கும் இருந்த வருத்தமே இது. நாங்கள் அவங்கடை படங்களைக் கழுத்தில தொங்கப் போட்டுக் கொண்டு திரிகிறம். பிறகு அவங்கள் செய்தது பிழை எண்டு கதைக்க முடியுமா? கதைச்சாலும் குட்டி பூர்ஸ்வா, குழப்பக்காரன் எண்டு துக்கில தொங்க விட்டிடுவாங்கள். நீங்கள் இதை எல்லாம் விளங்கிக் கொள்ளாமல் இளம் கண்டு பயமறியாது எண்டுகிறது போல நடக்கப் பார்க்கிறியள். கவனமா இருக்க வேணும் கண்ணன். நாங்கள் சும்மா கதைக்கிறதுகூட யாருடைய காதுக்கு எட்டினாலும் எங்கடை கழுத்துக்குச் சுருக்குக் கயிறு வந்திடும். அதால திரும்பவும் நான் உமக்குச் சொல்லுகிற

புத்தி என்ன எண்டா பேசாமல் வந்த அலுவலைப் பாரும் தோழர். இங்கை வேறை எதையும் கண்டு கொள்ளாதையும்'

'என்ன நினைக்க எனக்கே கோபமாகவும், இயக்கத்தை நினைக்கப் பயமாகவும் இருக்குது. போராட்டம், விடுதலை என்கிற கற்பனை எல்லாம் சிதைஞ்சு சின்னாபின்னமாய் போன மாதிரி இருக்குது. எவ்வளவு நம்பிக்கையோடை விசுவாசத்தோடை தோழர்கள் எல்லாம் வந்து இருக்கிறாங்கள். அவங்கடை வாழ்க்கையைக் கத்தி மேல நடக்கிற மாதிரி ஆக்கி வைச்சிருக்கினம்'

'அப்பிடியா நிலைமை இருக்குது? இயக்கத் தலைமையை முழுமையா குறை சொல்ல முடியாது. அவங்களுக்கும் வேற வழி இல்லாத மாதிரியான ஒரு நிலைமைதான்'

'சீ...'

'கண்ணன் அதை எல்லாம் பற்றிக் கடுமையா யோசிக்காதையும். ஊரோடை ஒத்து ஓடும். இப்ப எங்களுக்கு அதை விட்டா வேற வழி இல்லை'

'உட்கட்சி ஜனநாயகம் அற்ற, தோழர்களே வாய் திறக்க முடியாத ஒரு இயக்கம் போராடினால் என்ன போராடாட்டி என்ன? இதால தமிழருக்கு விடுதலை கிடைக்கும் எண்டு நான் நினைக்க இல்லை'

'சூ... மெதுவாய் பேசும் தோழர். நீர் என்னையும் இழுத்து விட்டிடுவீர் போல இருக்குது'

'கோபமாய், ஆத்திரமாய், ஆற்றாமையாக இருக்குது தோழர். இப்பிடி எண்டு தெரிஞ்சு இருந்தா நான் இதை எண்ணியே பார்த்து இருக்க மாட்டன். இயக்கத்துக்கு வந்து இருக்கமாட்டன். வெளிநாட்டுக்குப் போகிறவங்கள் பிழைக்கத் தெரிஞ்சவங்கள் போல இருக்குது'

'சிங்கள ஆமியிட்டை அடிமையா இருந்து சாகிறது இதைவிடக் கொடுமைதானே? அதுக்கு எதிராக எண்டாலும் எதாவது செய்யத்தானே வேணும்?'

'ஒரு ஆமியிட்டை விடுதலை பெற்று இன்னொரு ஆமியிட்டை அடிமையாகிற மாதிரி எல்லோ இது இருக்குது'

'அப்பிடி எல்லாம் நினைக்காதீங்க தோழர். எங்கடை இயக்கம் பிழையைத் திருத்தி ஒரு உன்னதமான போராட்டத்தை வருங்காலத்தில முன்னெடுக்கும். அதுக்கு நாங்களும் எங்களால ஆனதைச் செய்ய வேணும்'

'இது உங்களுடைய ஒரு ஆக்கப்பூர்வமான கருத்தும், நம்பிக்கையும். நானும் அப்பிடி ஒரு நல்ல பாதையில எங்கடை இயக்கமும் போராட்டமும் போக வேணும் எண்டு எதிர்பார்க்கிறன்'

'நம்பிக்கைதான் வாழ்க்கை. எல்லாம் சரியாக நடக்கும் எண்டு நம்புவம். அதைவிட முக்கியம் நாங்கள் இப்ப கதைச்சதை இங்கயே மறந்திடுகிறது. எதையும் மனதில வைச்சுக் கொள்ளாமல் வந்த போது இருந்த நம்பிக்கையோடு பயிற்சியைச் செய்யுங்க. காலம் பதில் சொல்லும். அப்ப பார்ப்பம்'

'ம்... நீங்கள் சொல்லுகிறது உண்மை. எங்களுக்கு அதைவிட வேற வழி இல்லை'

'சரி வாரும். நேரம் ஆச்சுது'

'சரி தோழர்'

இருவரும் முகாமை நோக்கிப் புறப்பட்டார்கள். தோழர் சிவத்திற்கு தாங்கள் பிந்தி விட்டோமோ என்கின்ற பதட்டம். அவர் விரைவாக நடந்தார். கண்ணனும் அப்படியே விரைவாக நடந்தான். திடீரெனச் சவுக்கம் பற்றைக்குள் இருந்து வந்த இருவர்,

'நில்' என்ற வண்ணம் பாய்ந்து முன்னே வந்தார்கள். அவர்கள் கையில் சவுக்கம் கட்டையும் மின் விளக்கும் இருந்தன. பின்பு அவர்கள் இருவரையும் முட்டுக் காலில் இருக்கச் சொல்லி முகத்திற்கு வெளிச்சம் பாய்ச்சி யார் என்று பார்த்தார்கள்.

'ஓ தோழர் சிவமா?' என்றார் காவலில் நின்ற தோழர்.

'ஓம் நேரமாகுது தோழர்'

'அதுதான் எங்க இவ்வளவு நேரம் மினக்கெட்டியள் தோழர்?'

'இல்லைக். குளிச்சுக் கொண்டு இருந்ததில நேரம் போயிட்டுது'

‘பரேட்டுக்குப் பிந்தினா என்ன நடக்கும் எண்டு உங்களுக்குத் தெரியும்தானே தோழர் சிவம்? நீங்கள் இப்படிச் சுணங்கி வாறியள்… கெதியாப் போங்க… விசில் அடிக்கப் போகிறாங்கள்’

‘ஓம் தோழர்… நாங்கள் வாறம். கெதியா வாரும் கண்ணன்… விசில் அடிக்கப் போகிறாங்கள்’

இருவரும் அவசரமாக முகாமை நோக்கிப் புயல் போலச் சென்றார்கள். முகாமிற்குச் சென்ற சிறிது நேரத்தில் வீளை ஊதப்பட்டது. எல்லோரும் விரைவாகவும், ஒழுங்காகவும் முகாமின் முற்றத்தில் ஒன்று கூடினார்கள். கணக்கெடுப்பு நடக்கத் தொடங்கியது. இந்தக் கணக்கெடுப்பு பிழைக்கக் கூடாது. இசகுபிசகாய் பிழைத்தால் அது சரியாகும் வரைக்கும் அனைவரும் காத்து நிற்க வேண்டி வரும். அத்தால் அனைவரது விருப்பமும் கணக்குச் சரியாக இருக்க வேண்டும் என்பதே. கழகத்தின் கொள்கைக்கு எதிராகச் சிலர் களவாக மனதிற்குள் கடவுளை வேண்டிக் கொள்வார்கள். கணக்கெடுப்பிற்குச் சிறிது நேரம் பிடித்தது. கணக்குப் பிசகாது சரியாக இருந்தது. இன்று பிட்டுக்கு விசேசமாகத் தயிரும் கொடுக்கப்படும் என்று அறிவித்து இருந்தார்கள். அதன் பின்பு அந்த அணிவகுப்புக் கலைக்கப்பட்டது. அப்படிக் கலையும் போது சுமன் அங்கு வந்து இருப்பதைக் கண்ணன் கண்டான். கண்ணன் உடனே ஓடிச் சென்று சுமனின் கையைப் பிடித்தான். கண்ணன் கையைப் பிடிக்கவும் சுமன் கண்கலங்கித் தேம்பத் தொடங்கினான். அது கண்ணனுக்கு மிகவும் மனவருத்தத்தைத் தந்தது. இதைப் பார்த்த தோழர் சிவமும் அங்கே வந்து சேர்ந்தார்.

‘இதுக்கெல்லாம் கண் கலங்கக் கூடாது. வந்த அலுவலில நாங்கள் கண்ணும் கருத்துமா இருப்பம். நடந்ததை நீ முழுமையா மற. நாளையில இருந்து புது மனிசராய் பயிற்சி செய்வம்’

கண்ணீரைத் துடைத்த வண்ணம் ‘ம்…’ என்றான் சுமன்.

‘கண்ணன் சொல்லுகிறது சரி தோழர். நீர் நடந்ததை மறந்திட்டு இனி எவ்வளவு கடுமையா பயிற்சி செய்ய முடியுமோ அவ்வளவு கடுமையாப் பயிற்சி செய்து வந்த காரியத்தில கண்ணும் கருத்துமாய் இருக்க வேணும். ஊரில சொகுசாய் இருந்த எண்ணத்தை எல்லாம் மறந்திட்டு இங்க இப்ப இருக்கிற நிலைமைக்கு எங்களை நாங்கள் மாற்றிக் கொள்ள வேணும்’ என்றார் தோழர் சிவம்.

‘கண்ணன் இனி விளங்கிக் கொள்வான் தோழர். நாங்கள் இனி அதைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. சுமனுக்கு இந்தத் திடீர் மாற்றம் பெரிய அதிர்ச்சி மாதிரி… அதாலதான் இந்தச் சிக்கல் எல்லாம். இனி அதெல்லாம் சரியாகிடும்’

அடுத்த வீளை ஊதியது. அது சாப்பாட்டிற்கான அழைப்பு. சுமனும் அவர்களோடு சாப்பிடச் சென்றான். மாலைச் சாப்பாட்டை அவன் வேறு வழி இன்றிக் கொட்டாமல் சாப்பிட்டான். அதைப் பார்த்த கண்ணன், சிவம் ஆகிய இருவருக்கும் மனத் திருப்தியாகவும் சந்தோசமாகவும் இருந்தது.

# 6.

அடுத்த நாள்

அடுத்த நாள் காலை எழுந்தது தொடக்கம் மைதானத்தில் ஓட்டம் தொடங்கும் வரைக்கும் சுமன் கண்ணனோடும், சிவத்தோடும் சேர்ந்தே வந்தான். இருந்தாலும் அவன் பதட்டமாய் இருப்பது போலவே கண்ணனுக்குத் தோன்றியது. அதற்குத் தான் என்ன செய்ய வேண்டும் என்பது விளங்கவில்லை. அதைப் பற்றிக் கதைத்தால் அவன் மேலும் கவலைப் படுவானோ என்கின்ற எண்ணம் மேலும் வலுத்தது. அதனால் அவன் சுமனோடு கதைக்கவில்லை. இருந்தாலும் வெளியே சென்ற போது கிடைத்த இடைவெளியில்,

'சுமனை எண்ணக் கவலையா இருக்குது தோழர்' என்றான் கண்ணன்.

'ஏன் எதிர்மறையாக நினைக்கிறீங்கள். அப்பிடி ஒண்டும் நடக்காது. அவன் இனியும் பின்வாங்க மாட்டான். என்றார் தோழர் சிவம்'

'நீங்கள் சொல்லுகிறதும் உண்மை. எதிர்மறையாக நினைக்கக் கூடாது. எண்டாலும் மனம் ஒரு குரங்கு இல்லையா?'

'ம்… கட்டுப்படுத்தும். உம்மடை திசைக்கு நீர் அதைத் திருப்பும்'

இவர்கள் கதைக்கும் போதே சுமன் வந்துவிட மேற்கொண்டு அவர்களால் கதைக்க முடியவில்லை. என்றாலும் தோழர் சிவம் அவனை ஊன்றிக் கவனித்தார். கண்ணன் கூறியது சரியாகவே இருந்தது. சுமனில் வெளிப்படையாகவே பதட்டம் தெரிந்தது.

'சுமன் நீர் பதட்டப்படுகிறீரே?' என்று தோழர் சிவம் கேட்டார். அவன் அதற்கு முதலில் பதில் அளிக்கவில்லை. பின்பு ஒருவித நடுக்கத்துடன்,

'எனக்குப் பயமா இருக்குது தோழர்' என்றான்.

'பயப்பிடாதை சுமன். உன்னால இயலும் எண்டதை முழுமையா நம்பு.
நம்பிக்கையோடே பயிற்சி செய்துபார். எதுவும் கஸ்ரமாய் இருக்காது. உன் நம்பிக்கைதான் உனக்கு தைரியத்தையும், சக்தியையும் தரும். அதால நீ எதுக்கும் உன்னுடைய நம்பிக்கையைக் கைவிடக் கூடாது. நான் சொல்லுகிறது சரியா? அதை நீ நம்புகிறாயா?'

'நம்புகிறன் தோழர். இண்டைக்கு எப்பிடி எண்டாலும் பயிற்சி செய்து முடிப்பன்'

'நல்லது சுமன். இந்த நம்பிக்கையை எப்பவும் எதுக்காகவும் கைவிடக் கூடாது'

'ம்...'

அதன் பின்பு யாரும் கதைக்கவில்லை. மைதானம் செல்லும் வரையும் அவனைப் பார்க்க முடிந்தது. தொடர்ந்தும் அவனில் பதட்டம் அப்பட்டமாய் தோழர் சிவத்திற்குத் தெரிந்தது. அது கண்ணனுக்கும் கவலையைத் தந்தது. இருந்தும் அவர்களால் எதுவும் செய்ய முடியவில்லை. ஓட்டம் தொடங்கியது. அதன் பின்பு அவன் அவர்கள் கண்களில் படவில்லை. ஈழத்திற்கான போராட்டத்திற்காகத் தோழர்கள் இந்த மைதானத்தில் அலையலையாக ஓடினார்கள். அந்த அலைகளில் அவன் மறைந்து போனான்.
கண்ணன் பயிற்சி முடிந்ததுமே அவனைத் தேடி மைதானம் முழுமையாகச் சுற்றி வலம் வந்தான். அலையற்ற கடலாக எங்கும் அமைதி குடிவந்த நேரம் அது. மைதானம் சோம்பல் முறித்தது. சுமன் அங்கே இல்லை. தொடர்ந்து தேடியும் எங்கேயும் அவனைக் காணமுடியவில்லை. அவன் பயிற்சி முடித்தால் மைதானத்தில் நின்று இருக்க வேண்டும். அப்படி நிற்காது எங்கே சென்றான் என்பது கண்ணனுக்கு விளங்கவில்லை. அவன் பலமுறை மைதானத்தைச் சுற்றிப் பார்த்தான். சுமனைக் ஒரு இடமும் காணவில்லை. தோழர் சிவம் ஒரு இடத்தில் இளைப்பாறிக் கொண்டு நின்றார். கண்ணன் அவரை நோக்கிச் சென்றான்.

‘தோழர்… சுமனைப் பாத்தியளா?’ என்று சிவத்தைக் கேட்டான்.
‘இல்லைக் கண்ணன். அவன் பயிற்சி முடியக் காம்பிற்குப் போய் இருப்பான் எண்டு நினைக்கிறன். வாரும் நாங்களும் அங்க போவம்’
‘அப்பிடிச் சொல்லுகிறியளே தோழர்?’
‘ம்… வாரும் தோழர். அவன் அங்கதான் போய் இருப்பான்’
‘எனக்கு அவனைக் கெதியாகப் பார்க்க வேணும் தோழர்’
‘விளங்குது. நானும் அவனைப் பார்க்கத்தான் வேணும்’
‘முகாமுக்கு ஓடிப் போவமா தோழர்?’
‘அலுப்பா இருக்குது தோழர் கண்ணன். இன்னொரு நாளைக்கு ஓடுவம். இப்ப நடப்பம்’
‘என்ன தோழர்? களைச்சுப் போனியள் போல இருக்குது?’
‘கவலைப்படாதையும்… திரும்பவும் பயிற்சி இருக்குத்தானே?’
‘அது எண்டா உண்மை. அவனைக் கெதியாப் பார்க்க வேணும் எண்ட ஒரு ஆர்வத்தில அப்பிடிக் கேட்டன்’
‘எனக்குத் தெரியும். எல்லாம் நல்லபடியா நடக்கும். அவன்ரை நம்பிக்கை மாதிரி எங்களுடைய நம்பிக்கையும் அவனுக்கு வேணும். அதுவே மனித பலம்’
‘நீங்கள் சொல்லுகிறது விளங்குது தோழர். நானும் அவனில நம்பிக்கை வைச்சிருக்கிறன். போய் அவனோடை காலைச் சாப்பாட்டைச் சேர்ந்து சாப்பிடுவம். அப்ப அவனுக்கு இன்னும் நம்பிக்கை ஊட்டலாம்’
‘ம்… அவன் பயப்படாத வகையில…’
‘உங்களுக்கும் குசும்புதான் தோழர்’
‘அப்படி இல்லை. அதிகமாச் சொன்னாப் பயந்து போயிடுவான். அதை நாங்கள் விளங்கிக் கொள்ள வேணும்’
‘நீங்கள் சொல்லுகிறது உண்மைத் தோழர். சப்பாத்து சத்தம் கேட்டுச் சகலமும் அடங்கி அடங்கி நம்பிக்கை, நகைச்சுவை எதுவும் எங்களிட்டை இல்லாமல் போச்சுது’
‘ம்… என்னதான் நடந்தாலும் எங்களை நாங்கள் இழக்கக் கூடாது. அதை இழந்து நிண்டா அதுதான் பரிதாபம்’

முகாமிற்குச் சென்று தங்களது குடிலுக்கு இருவரும் ஆர்வத்தோடு விரைந்தார்கள். அங்கே சுமன் படுத்திருந்தான். வெக்கையைப் பொருட்படுத்தாது போர்வையால் மூடிக்கொண்டு படுத்து இருந்தான். அது கண்ணனுக்குச் சந்தேகத்தை உண்டு பண்ணியது. ‘சீ அப்படி எதுவும் நடந்து இருக்காது’ என்று தன்னைச் சமாதானம் செய்து கொண்டான். அவனுக்குச் சுமனைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

‘என்ன சுமன் அலுப்பாய் இருக்குதே? ஏன் இப்பவே படுத்திட்டாய்? எழும்பு… சாப்பிடப் போக வேண்டிய நேரம் வந்திட்டுது’
‘ம்...’ அவன் ஒரு மாதிரியாக அனுங்கினான்.
‘என்ன ஒரு மாதிரி அனுங்குகிறா? இண்டைக்குப் பயிற்சி சுலபமாய் இருந்திச்சா. நீ இங்க வந்ததாலேயே அப்பிடிதான் இருக்கும் எண்டு நினைக்கிறன்’
‘...’
அவன் அதற்கு எந்தப் பதிலும் சொல்லவில்லை. அது கண்ணனுக்கு என்னவோ போல் இருந்தது.

‘என்ன சுமன் இண்டைக்கு சரியா இருந்திச்சா?’

அவன் மீண்டும் பதில் அளிக்கவில்லை. அதற்குப் பதிலாக அவன் மறுபக்கம் திரும்பிப் படுத்தான். மறுபக்கம் திரும்பிப் படுத்தவனிடம் இருந்து தேம்பித் தேம்பி அழும் சத்தம் வந்தது. கண்ணன் திடுக்கிட்டுப் போனான். தோழர் சிவத்திற்கும் அது ஆச்சரியமாக இருந்தது. கண்ணன் முதலில் சென்று அவன் அருகிலிருந்தான்.

‘என்ன நடந்தது?’
அவன் தொடர்ந்தும் மௌனம் சாதித்தான். கண்ணன் அவனை மெதுவாக உலுக்கி,
‘என்ன வருத்தக்காரர் மாதிரி படுத்து இருக்கிறா? எழும்பு சாப்பிடப் போவம்’ என்றான்.
‘எனக்குச் சாப்பாடு வேண்டாம். நான் ஊருக்குத் திரும்பிப் போக வேணும். இல்லாட்டி நான் சாப்பிடாமலே செத்துப் போயிடுவன்’
‘என்ன?’

அதிர்ச்சியாகக் கேட்ட வண்ணம் கண்ணன் சுமனின் போர்வையை உருவினான். அதை உருவி அவனைச் சாப்பாட்டிற்கு அழைத்துச் செல்ல வேண்டும் என்பதே அவன் நோக்கமாக இருந்தது. அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சி காத்திருக்கும் என்று அவன் போர்வையை உருவும் போது நினைத்து இருக்கவில்லை. சுமனைப் பார்த்து அவன் மேலும் மேலும் அதிர்ந்தாலும் இப்படியும் நடந்து இருக்கலாம் என்கின்ற ஒரு பயம் அவனிடம் இருந்தது. அந்தப் பயம் இப்போது நிஜமானதில் தலை சுற்றியது. இதை அவதானித்த தோழர் சிவம் அருகில் வந்து அவனது மேனியைக் கவனித்தார். குறி சுட்டது போன்று இன்று அதிக மூர்க்கமாக அடித்திருப்பதாய் அவருக்குத் தோன்றியது. சிவத்திற்கு முதன் முதல் பயிற்சி கொடுப்பவர்கள் மீது கடுமையான கோபம் உண்டாகியது. அடிமை என்று நினைத்து விட்டார்களா என்று மனது கொதித்தது. இயக்கத்திற்கு வந்ததிற்காக யாரும் அடிமைச் சாசனம் இவர்களுக்கு எழுதிக் கொடுக்கவில்லை. அதை ஏன் இவர்கள் விளங்கிக் கொள்கிறார்கள் இல்லை? பயிற்சி கொடுத்தவர்களை நிறுத்தி வைத்து விளாச வேண்டும் என்கின்ற கோபம் அவருக்குப் பொங்கியது. என்ன செய்ய முடியும்? அப்படிச் செய்தால் அதன் விளைவு என்னவாக இருக்கும்? இதுவும் ஒரு இராணுவமாக வளர்ந்து கொண்டு வருகிறது. இராணுவத்தில் கேள்வி கேட்க முடியாது. சொல்வதைச் செய்ய வேண்டும். அதன் பின்பே எதைப் பற்றியும் கதைக்க முடியும். இங்கு அந்தச் சுதந்திரம்கூட இல்லை. இப்போது கேட்டாலும் நீ முகாமை குழப்ப வந்திருக்கிறாயா? அல்லது அரசியல் பிரச்சினை உண்டாக்குகிறாயா? என்று அதைத் திரித்து வினாவுவார்கள். இங்குக் கேள்வி கேட்காது சொல்வதைச் செய்து பிழைக்க வேண்டும். இது ஒரு தப்பான முன்மாதிரி. யாரும் தட்டிக் கேட்க முடியாத தர்மசங்கடம்.

‘ஐயோ இண்டைக்கும் உன்னை அடிச்சிருக்கிறாங்களாடா சுமன்? நீ ஏன்ரா இப்படி அடி வாங்குகிறாய்? பயிற்சியைத் தெண்டிச்சு ஒழுங்காய் செய்திருக்கலாம்தானே?’ என்றான் கண்ணன்.
‘இயலும் எண்டாச் செய்யமாட்டனா? நீயும் விளங்காமல் கதைக்கிறா?’
‘இல்லையடா... இவங்கள் ஒழுங்காப் பயிற்சி செய்யாமல் விடமாட்டாங்கள். விளங்கிக் கொள். தோழர் இதுக்கு என்ன செய்யலாம் எண்டு நினைக்கிறியள்?’
‘மாட்டை அடிச்சிருக்கிற மாதிரி அடிச்சு இருக்கிறாங்கள். பயிற்சி செய்ய முடியாட்டி விட வேண்டியதுதானே? எதுக்கு இப்படி அடிச்சு இருக்கிறாங்கள்? இதைக் கேட்கப் போனா அரசியல் பிரச்சினை செய்கிறியளோ எண்டு கேட்பாங்கள். சில வேளை மண் வீட்டுக்க கொண்டே வைச்சாலும் வைச்சிடுவாங்கள். நாங்கள் இதைக் கதைக்க முடியாது. கதைச்சாலும் பிரச்சினை ஆகிடும். நடந்ததை நாங்கள் மாற்ற முடியாது. தோழர் சுமன் வாரும் போய் சாப்பிடுவம். பிறகு என்ன செய்யலாம் எண்டு யோசிப்பம். இதுக்கு எதுவும் செய்ய முடியாது எண்டு நான் நினைக்கிறன். அதுவே இப்போதைக்கு பிழைக்கிற வழி. நீங்கள் எப்படி எண்டாலும் பயிற்சி செய்துதான் சமாளிக்க வேணும்’
‘என்னால முடியல்லத் தோழர். நீங்கள் ஆவது என்னை விளங்கிக் கொள்ளுங்க தோழர்’
‘எனக்கு விளங்குது தோழர் சுமன். ஆனால் பயிற்சி தாரவங்களுக்கு அது விளங்காது தோழர். அதை நீங்கள் விளங்கிக் கொள்ளுங்கோ தோழர். அவங்கள் பயிற்சி செய்யாட்டி அதுக்குப் பலவிதமா அர்த்தம் கற்பிப்பாங்கள். அதுவும் வக்கிரமான அர்த்தமே அவங்கடை கற்பனையில முதல்ல வரும்’
‘தோழர் சுமன் எழும்பும். எப்பிடி என்டாலும் நாங்கள் இந்தக் கஸ்ரத்தில இருந்து விடுபட வேணும். அது உம்முடைய கையிலும் உம்முடைய நம்பிக்கையிலும் இருக்குது. உம்மால முடியும் எண்டதை நீர் நம்ப வேணும். அந்த நம்பிக்கைதான் உம்மை இந்தக் கஸ்ரத்தில இருந்து காப்பாற்றும்’

‘தோழர் நீங்கள் கதைக்கிறதைக் கேட்க நல்லா இருக்குது. ஆனால் என்னால இயல இல்லை. இயலும் எண்டா நான் ஏன் அடி வாங்குகிறன். ஏன் நான் இங்க வந்து தேவை இல்லாமல் மாட்டுப்பட்டன் எண்டு எனக்குத் தெரிய இல்லை’

‘இது ஒற்றை வழிப் பாதை மாதிரி. இயக்கத்திற்கு வந்தாச்சுது. சமாளிக்க வேணும் தோழர். இப்ப சாப்பிட வாரும். இதுக்கு ஏதாவது வழி இருக்குதா எண்டு டொக்ரரிட்டை நான் ஒருக்கா கேட்டுப் பார்க்கிறன். எதுக்கும் நீர் கொஞ்சம் பொறுமையா நிலைமையை விளங்கிக் கொண்டு நடக்க வேணும். எனக்கும் நெஞ்சு குமுறுது. ஆனா என்ன செய்ய முடியும்? எழும்பும் சாப்பிட்டிட்டு வருவம்’

சுமன் பரிதாபமாய் கண்ணனையும் தோழர் சிவத்தையும் பார்த்தான். அவர்கள் சொல்வதில் உண்மை இருக்கிறது என்பது விளங்கியது. பசி வேறு வயிற்றில் ஊற்றிய அமிலமாக அவனைக் கொல்லாமல் கொன்றது. வேறு வழி இல்லை. ஏதாவது சாப்பிட வேண்டும். சாப்பிட்டால் என்ன சாப்பிடாவிட்டால் என்ன நாளைக்கு மைதானத்திற்குச் செல்ல வேண்டும். அதை நினைக்க மீண்டும் அவனுக்குத் தலை சுற்றியது. இருந்தும் கண்ணனும் தோழர் சிவமும் ஒவ்வொரு பக்கமாக நின்று அவனைத் துக்கி எழுப்பி விட்டார்கள்.

பின்பு கண்ணன் தன்னிடம் இருந்த சட்டை ஒன்றை அவனுக்கு அணிவித்தான். பெரும்பாலான காயங்கள் அதற்குள் மறைந்து கொண்டது. அதன் பின்பு,

‘போவமே?’ என்றான் கண்ணன்.

‘போவம்’ என்றார் தோழர் சிவம். சுமன் அழுவதா சிரிப்பதா என்கின்ற கேள்வியில் எழுந்த ஒரு சிரிப்போடு அவர்களோடு தயங்கித் தயங்கித் தள்ளாடி நடந்தான். சிறிது துரம் நடந்து இருப்பார்கள்,

‘என்ன நீங்கள் இரண்டு பேரும் இவருக்குப் போடிக்காட்டே?’ என்றான் சாலன். அவன் பயிற்சி ஆசிரியர்களில் ஒருவன். அதைக் கேட்டதும் மூவருக்கும் அதிர்ச்சியாக இருந்தது. சுமன் பயத்தோடும், பதற்றத்தோடும் மாரியில் நனைந்த கோழி போல் நடுங்கினான். தோழர் சிவம் ஒரு கணம் அதிர்ந்தாலும் தன்னை விரைவாகச் சமாளித்துக் கொண்டு,

‘என்ன தோழர் சொல்லுகிறியள்?’ என்றார்.

‘ஆங்… நீங்கள் என்ன இவருக்கு போடிக்காட்டோ எண்டு கேட்டன்’

‘ஏன் தோழர் அப்பிடிக் கேட்கிறியள்? இயலாத தோழருக்கு உதவி செய்யக் கூடாது எண்டுறியளா தோழர்? இராணுவம் எண்டாலும் சக சிப்பாய்க்கு உதவி செய்யத்தானே வேணும்? நீங்கள் பொடிக்காட்டா எண்டு கேட்கிறது ஒரு மாதிரி இருக்குது தோழர்’

‘சிவம் தோழர் சொன்னா அது சரியாக இருக்கும். அதே மாதிரி நாளைக்கு ஒழுங்கா றெயினிங்கையும் செய்யச் சொல்லுங்க தோழர். யாருக்கும் யார் மேலையும் எந்தப் பிரச்சினையும் இல்லை. நாங்கள் எங்கடை கடமையைச் செய்கிறம். அதுக்கு எல்லாரும் ஒத்துழைக்க வேணும். தோழர் சுமன் நாளைக்கு நல்லாப் பயிற்சி செய்வார் எண்டு நினைக்கிறன்’

‘ம்… செய்வார் தோழர். நாங்கள் கதைக்கிறம் தோழர்’

‘சரி. நான் வாறன் தோழர். தோழர் கண்ணன்… தோழர் சுமனுக்கு உற்சாகம் கொடும். நாளைக்குச் சந்திப்பம் தோழர்’

தோழர் சாலன் போவதைச் சுமன் வெறுப்போடு பார்த்துக் கொண்டு நின்றான். அதைத் தோழர் சிவமும் கவனித்தார். அவனுக்குப் புத்திமதி சொல்ல வேண்டும் போல் இருந்தது. என்றாலும் அது அதிகமாகிவிடும் என்று நினைத்த தோழர்,

‘நாங்கள் சாப்பிடப் போவம்’ என்ற வண்ணம் நடந்தார்.

# 7.

பறக்க நினைத்த பட்சி

சாப்பிட்ட பின்பு மூவரும் வந்து படுத்துக் கொண்டார்கள். படுத்துக் கொள்வது வேறு நித்திரை கொள்வது வேறு. தோழர் கண்ணனும் தோழர் சிவமும் நாள் முழுவதும் வயலில் வேலை செய்து களைத்தவர்கள் போலக் குறட்டை நாதம் பேச நித்திரை கொண்டார்கள். சுமனால் அப்படி நித்திரை கொள்ள முடியவில்லை. ஏன் நான் இங்கு வந்தேன் என்கின்ற கேள்வி உள்ளிருந்து உயிரோடு அவனை உண்டது. அவன் புரண்டு புரண்டு படுத்தான். அவனுக்குத் தன்னை எண்ண கண்கள் அடங்கா ஊற்றாக, கண்ணீர் வற்றாத ஆறாக, விம்மல் முடியாத துறலாகக் கவலை பொங்கி வழிந்தது. அவன் அதை மற்றவர்கள் கேட்காது தன்னுள் அடக்க அவஸ்தைப்பட்டான். அவனுக்கு இப்படியே இங்கிருந்து அல்லாடுவது சற்றும் பிடிக்கவில்லை. இது தேவைதானா என்கின்ற கேள்வி எழுந்தது. இருந்தும் இங்கு வந்து அகப்பட்ட பின்பு இனி என்ன செய்வது என்பது அவனுக்கு விளங்கவில்லை.

சுமன் திரும்பிப் படுத்தான். எங்கும் அமைதி. சவுக்கம் தோப்புக்கள் எங்கும் காரிருள் கவுண்டு பெரும் அரண்களாகத் தோன்றின. காவலில் நின்றவர்களின் மின் விளக்குகள் இடைக்கிடை ஏதாவது அசைகிறதா என்று உன்னிப்பாகத் தேடின? காற்று சற்றும் வீசாத ஒரு இரவு. சுமனின் மனதில் வெளியே சவுக்கம் தோப்பில் குந்தி இருந்த இருள் போலக் கவலை குந்தி இருந்து அழுத்தியது. அவனுக்கு மூச்சு முட்டுவதாய் தோன்றியது. என்ன செய்வது என்கின்ற கேள்வி விடையில்லாத விடுகதையாக அவன் நித்திரையைக் காவு கொண்டது.

அவன் மீண்டும் புரண்டு படுத்தான். நித்திரை… இந்த வாழ்க்கை… என்பன கைக்கெட்டாத தொலைவில் கைவிட்டுத் தொலைந்ததான கவலை அவனை மீண்டும் ஏறி மிதித்தன. இதற்கு விடுதலை வேண்டும் என்று தோன்றியது. எதற்கு என்பது அவனுக்கு முதலில் விளங்கவில்லை. பின்பு சாதுவாகப் புலப்பட்டது. புலப்பட்டாலும் எப்படி என்பது சற்றும் விளங்கவில்லை. ஆனால் இதை இப்படியே தொடர முடியாது என்று தோன்றியது. எப்படிக் கேட்பது? கேட்டால் என்ன சொல்லுவார்கள்? மற்றவர்களுக்குத் தெரிந்தால் என்ன நடக்கும்? சுமனால் நித்திரை கொள்ள முடியவில்லை. எழுந்து வெளியே சென்றால். அப்படியே எங்காவது சென்றுவிட்டால்? எங்கே இந்த முகாம் இருக்கிறது என்பது தெரியாது. எப்படி இங்கு இருந்து போவது என்று தெரியாது. ஆனாலும் தெரியாததைத் தெரிந்து கொள்வதே சுதந்திரத்தைத் தரும் என்று தோன்றியது. சுமன் எழுந்து இருந்தான். வெளியே போவது என்றால் காவலுக்கு நிற்பவர்களிடம் என்ன சொல்வது? எங்கே செல்வது என்றாலும் நேரமும் பெயரும் எழுதிக் கொடுத்துவிட்டுச் செல்ல வேண்டும். நேரத்திற்கு வராவிட்டால் சங்கு ஊதிவிடுவார்கள். அத்தால் முகாம் அலங்கோலமாகும். அமைதி இழந்து அலை மோதும். சுமனுக்கு மனதிலிருந்து எழுந்த துணிவு காலால் கரைந்து கனவாய் போயிற்று. இருப்பதற்குக்கூடச் சக்தி இல்லாதது போல இருந்தது. சுமன் விழுந்து படுத்தான். நித்திரை வர மறுத்தது. என்ன செய்வது என்கின்ற கேள்வி மீண்டும் அவனைக் குடைந்தது. கண்ணனை எழுப்பிக் கதைக்க வேண்டும் போல் இருந்தது. அவனோடு கதைப்பதற்குக்கூடப் பயமாக இருந்தது.

கதைக்காமலிருந்து என்ன செய்வது என்கின்ற கேள்வி எழுந்தது. கதைக்க வேண்டும். ஏதாவது ஒரு முடிவுக்கு வரவேண்டும். அவன் மீண்டும் துணிவை வரவளைத்தான். துணிவோடு எழுந்து இருந்தான். கண்ணனை எழுப்பி அதைக் கதைப்பது என்று முடிவு பண்ணினான். மெதுவாகக் குனிந்து கண்ணனின் காதருகே வாயை வைத்து,

'கண்ணா… கண்ணா...' என்று கூவினான். அது மற்றவர்களுக்குக் கேட்டுவிடக் கூடாது என்கின்ற பயமும் மனதிலிருந்தது. கண்ணன் அசையவில்லை. சுமனும் அதற்கு அசைந்து கொடுப்பதாய் இல்லை. மீண்டும் மீண்டும் குனிந்து கூப்பிட்டான்.

'சீ போ…' என்ற வண்ணம் கண்ணன் மறுபக்கம் திரும்பிப் படுத்தான். சுமன் விடவில்லை. மீண்டும் முயற்சி செய்தான். அப்போது அந்த வழியால் சென்ற சுற்றுக் காவலுக்கு அது கேட்டுவிட்டது. அன்று மணிமாறன் சுற்றுக் காவலாய் இருந்தான். அவன் இலகுவாக யாரையும் நம்பாத ஒரு சந்தேகப் பிறவி. முகாமிற்குள் யாரும் ஊடுருவலாம். அல்லது உள்ளிருந்து யாரும் ஊடுருவிக்கொண்டு வெளியே செல்லலாம் என்கின்ற தத்துவங்களை முழுமையாக நம்புபவன். அது பிராந்தியாக இருக்குமா என்று அவன் ஒரு போதும் சந்தேகப்பட்டதே இல்லை.

கழகத்தை உடைப்பதற்கே கழகத்தில் அரசியல் பிரச்சனை என்று ஒன்று உருவாக்கப்பட்டது என்பதை அவன் நம்புவதோடு அது தொடர்ந்தும் இரகசியமாக நடக்கிறது என்பதையும் அவன் வலுவாக நம்புபவன். அதனால் அவனுக்குச் சிறு சந்தேகங்களே பெரும் ஆர்வத்தை உண்டு பண்ணிவிடும். கண்கள் பூதக்கண்ணாடியாக மாறித் துருவத் தொடங்கிவிடும். அதனால் அவன் முதலில் குடிலுக்கு உள்ளே வராது சுமன் கண்ணனை எழுப்புவதை உற்றுக் கவனித்தான். அவனுக்கு அத்தால் இருவர் மீதும் சாதாரணமாகவே சந்தேகம் உண்டாகியது. அவன் அதன் பின்பு உள்ளே போனான். அப்படிப் போகும் போது சந்தேகம் அவன் தலையில் ஏறிக் குந்தி இருந்து சவாரி செய்தது.

'என்ன தோழர் சுமன்…? உங்களுக்கு நித்திரை வரேல்லையா? என்ன ஐடியா உங்களுக்கு? ஆர் தோழர்… கண்ணனும் முழிப்பா?'

'இல்லைத் தோழர். கண்ணன் நித்திரையால எழும்ப இல்லை. நான் வெளியால போக வேணும். வயித்தைக் கடுமையா கலக்குது. தோழர் நிலைமையை விளங்கிக் கொள்ளுங்க… உங்கடை தத்துவங்களை இப்ப எங்களில பாவிக்காதையுங்க'

'ஆங்… அப்பிடியே? வெளிய போய் வந்தாப் பிரச்சனை இல்லை. வெளியவே போயிட்டியள் என்டாத்தான் பிரச்சனையாகும். வெளிக்குப் போகிறது எண்டா உசாரா கூப்பிட்டுக் கூட்டிக் கொண்டு போய் வாரும். அதுக்கு ஏன் உந்த உஸ் உஸ் தோழர்? இது தேவையில்லைத் தானே? இப்பிடிச் செய்தா அது தேவை இல்லாத சந்தேகத்தைத்தான் உண்டு பண்ணும். பிறகு என்ரை தத்துவங்களைக் குறை சொல்லக் கூடாது தோழர்'

'நீங்கள் தப்பா நினைக்கிறியள் தோழர்'

'நான் தப்பா நினைக்க இல்லை. ஆர் எண்டாலும் அப்பிடித்தான் நினைப்பினம். நிலைமை இங்கை அப்பிடிதான் இருக்குது. நீர் கெதியா போய் வாரும்'

'சரி தோழர்'

'கண்ணன் எழும்பு' என்று தனது பாதணியால் குத்திக் கண்ணனை எழுப்பினான். அவன் கோபத்தோடு துடித்துப் பதைத்து எழுந்தான். கண்ணன் யார் என்றாலும் அடித்திருப்பான். ஆனால் முன்னே மணிமாறன் நின்றான். அதுவும் காவலில் நின்றான். வந்த கோபத்தைப் பாடுபட்டு வாலாய் மடக்கிச் சுருட்டி வைத்துக் கொண்டு எதுவும் விளங்காது விளித்தான்.

'தோழர் சுமன் வெளிக்குப் போக வேணுமாம். அதுதான் எழுப்பினான். நீங்கள் எழும்புகிறியள் இல்லை. அதுதான் கொஞ்சம் தட்டி எழுப்ப வேண்டி இருந்திச்சுது. கெதியா அவரைக் கூட்டிக் கொண்டு போயிட்டு வாருங்க. அடுத்த றவுண்டுக்கு வரேக்க நீங்கள் இங்க இருப்பியள் எண்டு நினைக்கிறன்'

'என்ன?'

'நான் திரும்பவும் உங்களுக்கு முதலில இருந்து சொல்ல முடியாது. சுமனிட்டை விரிவாக் கேளும். இப்ப அவருக்கு வெளிக்குப் போக உதவி வேணுமாம். கூட்டிக் கொண்டு போயிட்டு வாருங்க தோழர். நான் நிறைய இடம் சுற்றி வரவேணும்'

'அதுக்குக் காலால குத்தியா எழுப்பிவீங்கத் தோழர்? ஏன் தோழர் இப்பிடிச் செய்கிறியள்? நாங்களும் உங்களை மாதிரித் தோழர்தானே தோழரே?'

'நீங்கள் எழும்ப இல்லை… அதுதான் தோழர். உங்களுக்கு நொந்து இருந்தால் சொறி தோழர். இப்ப கெதியாப் போயிட்டு வாங்க'

'ம்… சரி தோழர். என்னடா கோதாரி உனக்கு வயித்துக்க? இதுக்கு நீ சாப்பிடாமலே இருந்து இருக்கலாம். ஒழுங்கா நித்திரை கொண்டால்தானே காலைமை பயிற்சி செய்ய முடியம்? இப்பிடி இரவில…' என்று சுமனைப் பார்த்து புறு புறுத்தான் கண்ணன்.

'அப்ப நான் இங்கயே இருக்கட்டா?' என்று கோபமானான் சுமன்.

'ஐயோ… வாடா…'

‘ம்…’ என்கின்ற ஒரு கோப உறுமலோடு புறப்பட்டான் சுமன். கண்ணன் முன்பு சென்றான். சமையல் அறைப் பக்கத்தால் வெளியே வெளிக்குச் செல்லும் காவலில் பெயரையும் நேரத்தையும் பதிந்துவிட்டு இருவரும் வெளியே சென்றார்கள். காவலில் நின்றவன் தன் பங்கிற்கு, ‘கெதியாப் போயிட்டு வாங்க’ என்றான். அதைக் கேட்ட கண்ணனிற்குக் கோபம் வந்தது. தோழர்களே தோழர்களை நம்பாத ஒரு நிலைமையில் முகாம்… கழகம்… அதன் செயற்பாடுகள்… விடுதலைப் போராட்டத்தை அழிக்கப் பாசிச அரசுகள் பல வழிகளைக் கையாளும். எமது போராட்டத்தில் அரசுகள் மட்டும் பாசிசம் இல்லை என்பதுதான் கண்ணனின் கோபம். அதை எண்ணினால் ஏன் புறப்பட்டோம் என்று எண்ணத் தோன்றும்.

திடீரெனக் காற்று வீசத் தொடங்கியது. அந்தக் கூதல் காற்று ஈரவயல்கள் தழுவிக் குத்தி முறிந்து உடல் தழுவிப் போனது. மேலிலிருந்த சட்டையைவிடப் போர்வையும் தேவை போன்ற அதன் தழுவல் வக்கிரமாக இருந்தது. அதன் தழுவலின் வக்கிரத்தை உணர்ந்த கண்ணன் அன்புக் காதலியின் அணைப்பு அந்தப் போர்வைக்குப் பதிலாக இருந்தால் எப்படி இருக்கும் என்கின்ற அபத்தமான கற்பனையில் திடீரென மிதந்தான். அவன் அதிலிருந்து விடுபட்டுத் தமது அலுவலை முக்கியப்படுத்த எண்ணினான்.

‘வா கெதியாப் போயிட்டு வருவம்’ என்றான் கண்ணன்.

‘திடீர் எண்டு குளிருது’

‘நான் என்ன வெக்கையா இருக்குது எண்டு சொன்னனா? குளிருதுதான். நாங்கள் கெதியாப் போயிட்டு வருவம். அவன் என்ன றவுண் டியூட்டி ஏறி விழுந்திட்டுப் போகிறான். காலால வேற உதைக்கிறான். ஊராய் இருந்து இருந்தால் மூஞ்சையைப் பேர்த்து இருப்பன். இங்க வந்த நோக்கம் வேறை. அதால எல்லாத்தையும் தாங்கிக் கொண்டு கூழைக் கும்பிடுபோட வேண்டி இருக்குது’

‘அது உனக்கு இப்பதான் தெரியுதா?’ என்றான் சுமன்.

‘ஓ… உனக்கு அது ஏற்கனவே தெரியுமே?’

‘இது சரிவராது கண்ணன்’

‘அப்ப என்ன செய்கிற யோசனை உங்களுக்கு?’

‘பகிடியை விடு கண்ணன்’

‘வேறை என்னடா? வந்திட்டம். இனி எது எண்டாலும் அனுபவிக்க வேண்டியதுதான். வேற வழி இல்லை’

‘மனம் இருந்தால் இடம் உண்டு கண்ணன்?’

‘நீ என்ன சொல்ல வாறாய்?’

‘நான் ஒண்டு சொல்லுவன். கோபப்படாமல் ஆறுதலாகக் கேட்க வேணும். நாங்கள் நல்ல எண்ணத்தோடைதான் வந்தம். இங்க எல்லாம் தலைகீழாக இருக்குது. இதை எல்லாம் சகிச்சுக் கொண்டு இங்க இருக்க வேணும் எண்டு எந்தக் கட்டாயமும் இல்லை எண்டு நான் நினைக்கிறன்? நாங்கள் என்ன தப்புச் செய்து போட்டுச் சிறைக்குத் தண்டனைக்காகவா வந்து இருக்கிறம்? ம்… விடுதலைக்கு வந்து இருக்கிறம். அது பிடிக்காட்டி அதில இருந்து விலகிப் போகிற உரிமையும், சுதந்திரமும் எங்களுக்கு இருக்குதா?’

‘உனக்குச் சரியான பயித்தியம் பிடிச்சிருக்குது எண்டு நினைக்கிறன். என்னோடை இப்பிடி இனிக் கதைச்சா நானே அடிச்சு மூஞ்சையைப் பேர்த்துப் போடுவன். நீ இங்க இருந்து கொண்டு மொக்குத்தனமாய் கதைக்கிறாய். இப்படிக் கதைக்கிறது எண்டா இனிமேலைக்கு என்னோடை கதைக்காதை. இப்பிடி நீ கதைக்கிறது எண்டா நாங்கள் நண்பராயும் இருக்க முடியாது… தோழராயும் இருக்க முடியாது’

‘ஏன் கண்ணன் இப்படிப் பயந்து நடுங்குகிறாய்? நான் இங்க இருக்க வேண்டி வந்தா நீ மாத்திரம் ஊருக்குப் போவாய் எண்டு நினைக்கிறன். அப்ப உனக்கு நல்ல சந்தோசமாய் இருக்குமா?’

‘என்னடா கதைக்கிறா?’

'என்னால இதைத் தாங்க முடியாது. இவங்கடை பயிற்சி எல்லாம் செய்ய என்னால இயலாது. இவங்கள் இப்படி அடிக்க அதை நான் பொறுத்துக் கொண்டும் இருக்கமாட்டன். இங்க இருந்து உயிரோடை வெளியேற வேணும். இல்லாட்டி அது என்ரை சாவுக்குப் பிறகாவது நடக்க வேணும்'

'டேய்... நீ என்ன விசர்க் கதை கதைக்கிறாய்?'

'நான் ஒண்டும் விசர் கதை கதைக்க இல்லை. நான் என்ன செய்ய வேணும் எண்டதில தெளிவாகத்தான் இருக்கிறன். நீ உதவியா இருக்கிறது எண்டா உதவியா இரு. இல்லாட்டி நான் தனிச்சு எண்டாலும் நினைச்சதைச் செய்வன். விடுதலை எண்டு வந்து நான் செய்ய முடியாததை, விருப்பம் இல்லாததை அடிமை மாதிரிச் செய்கிற நவீன காலத்து குழந்தைப் போராளியாக இங்க இருக்கத் தயார் இல்லை. என்னால முடிய இல்லை. முடிய இல்லை எண்டா விட வேணும். இல்லாட்டி நான் அதுக்கு ஒரு முடிவு கட்ட வேணும். முதல்ல எங்களுக்குச் சுதந்திரம் வேணும். பிறகு நாட்டின்ரை சுதந்திரத்தைப் பற்றிக் கதைக்கலாம். ம்... அடிமைகள் ஒருநாளும் அடுத்தவைக்குச் சுதந்திரம் பெற்றுக் கொடுக்க முடியாது'

'நீ என்ன கதைக்கிறாய் எண்டு தெரிஞ்சுதான் கதைக்கிறியா? சும்மா வாய்க்கு வந்த மாதிரி எல்லாம் கதைக்கக் கூடாது. நீ கதைக்கிறதை யாரும் கேட்டால் சிரிப்பினம். இதை நீ இயக்கத்துக்கு வாறத்துக்கு முதல் யோசிச்சு இருக்க வேணும். இங்க வந்த பிறகு யோசிக்கக் கூடாது. இயக்கத்துக்கு வரேக்கையே உன்னுடைய உடல், பொருள், ஆவி அனைத்தும் அதிற்கு அர்ப்பணம் எண்டு தானே பொருள். அது விளங்காமலா இங்க வந்து இருக்கிறாய்? இது சரி இல்லைச் சுமன். இப்படி நீ நினைக்கிறதோ அல்லது கதைக்கிறதோ சரி இல்லை. இதை யாரும் அறிஞ்சால் பெரிய பிரச்சினையாய் வரும். தயவு செய்து நீ இப்படி நினைக்காதை. இப்படிக் கதைக்காதை. அது மன்னிக்க முடியாத தப்பு. நிச்சயம் எங்களைச் சிக்கலில மாட்டி விடும்'

'எல்லாத்தையும் இழக்கத் தயாராகத்தான் போராட்டத்திற்கு எண்டு வந்து இருக்கிறம். அதுக்காக எங்களை அடிமைப்படுத்த இவங்கள் யார்? சர்வாதிகாரத்திலும், பாசிசத்திலும் மிதக்கிற ஒரு இயக்கத்தால யாருக்கு விடுதலை வாங்கித்தர முடியும்?'

'அறப்படிச்சுக் கூழ்ப்பானைக்க விழுந்த கதை மாதிரி நீயும் மாட்டுப்படுகிறதோடை மற்றவையையும் மாட்டி விடாத. சும்மா வாயை வைச்சுக் கொண்டு இரு. இல்லாட்டி மண்வீட்டுக்க இருக்கிற சில மர்ம மனிதர்கள் போல நாங்களும் விலாசம் இல்லாமல் போயிடுவம். தயவு செய்து நிலைமையை விளங்கிக்கொள் சுமன்'

'உனக்குப் பயமா இருந்தால் நீ என்னோடை கதைக்காமல் ஒதுங்கி இரு. ஆனா என்னால இப்படி அடி வாங்கிக் கொண்டு அடிமையா இருக்க முடியாது. நான் உயிரோடை இருக்கிறனோ இல்லையோ இந்த நரகத்தில தொடர்ந்து வாழமாட்டன்'

'நீ விபரீதம் தெரியாமல் விளையாடிக் கொண்டு இருக்கிறாய். எது செய்கிறது எண்டாலும் அது உருப்படியா இருக்க வேணும். யாருக்கும் பிரயோசனம் இல்லாமல் வீம்புக்கு எதுவும் செய்யக் கூடாது. அதுவும் இயக்கம் எண்டு வந்த பிறகு நீ என்ன கதை கதைக்கிறாய்?'

'இது வீம்பு இல்லை. நான் அடிமையாக் கிடந்தா என்னைப் போல நிறையத் தோழர்கள் அடிமையாக் கிடக்க வேண்டி வரும். இதுதான் முதல் முக்கியமான போராட்டம். இதில கிடைக்கிற வெற்றிதான் நாட்டுக்குக் கிடைக்கப் போகிற வெற்றியா இருக்கும்'

'ஓ... பெரிய அறிவு ஜீவி இவர். சும்மா விசர் கதை கதைச்சுக் கொண்டு இருக்காதை. றெயினிங் செய்கிறதுக்கு கள்ளம் அடிச்சுப் போட்டு இவர் இப்ப இரகசியமாப் பெரிய தத்துவம் கதைக்கிறார். வந்த அலுவலை ஒழுங்கா முடிச்சுக் கொண்டு போய் சேருவம். இனிமேலைக்கு என்னை இதுக்கு எல்லாம் கூட்டிக் கொண்டு வராதை. உன்னுடைய பயித்தியத்துக்கு நாங்களும் பலியாக முடியாது. நீ என்னோடை கதைக்கிற கதை மண்டை களண்டவன் கதைக்கிற மாதிரி இருக்குது'

'விளங்குது. உனக்கு உன்னுடைய அக்கறை. சரி நான் உங்களை இனி டிஸ்ரப் பண்ண இல்லை. என்ரை மேலில கை வைக்கேக்கையே நான் செத்துப் போயிட்டன். இனி என்ன நடந்தாலும் பருவாய் இல்லை. நான் விரும்பின மாதிரி என்னை இருக்க விடவேணும். இல்லாட்டி என்னை என்ரை வழியில விட வேணும்'

‘இது ஒண்டும் மடம் இல்லை. நீ ஒரு இராணுவத்திற்கு வந்து இருக்கிறாய். அப்ப அதுக்கு ஏத்த மாதிரிதான் நடக்க வேணும். உன்ரை இஸ்ரத்திற்கு இங்க இருக்க முடியாது. எந்த இராணுவத்திலும் அப்பிடி இருக்க விடமாட்டாங்கள்’

‘நான் இராணுவத்திற்கு வர இல்லை. விடுதலை வேண்டும் எண்டு ஒரு விடுதலை இயக்கத்திற்கு வந்து இருக்கிறன். இந்த இராணுவம் எண்ட நினைப்பே பிழை. இது எங்களுக்குப் பலம் எண்டு நினைக்காத. இதுவே எங்களுக்குப் பலவீனமாய் எதிர்காலத்தில வரப்போகுது. அடி வாங்கினதால நான் இதைச் சொல்ல இல்லை. அடிமனதில எனக்குத் தோன்றுகிறதால நான் சொல்லுகிறன். இதெல்லாம் இப்ப விளங்கப்படுத்த முடியாது’

‘ம்… இவர் பெரிய ஞானி. சும்மா உன்ரை புல்டாவை விடு. விடுதலை இயக்கம் ஒரு இனத்திற்கு விடுதலையைப் பெற்றுத்தர வேணும் எண்டா அதுக்கு ஒரு இராணுவமும் கட்டாயம் வேணும். அதுவும் பலமான இராணுவமாய், வீச்சான இராணுவமாய் அது இருக்க வேணும். அதுக்கு கடுமையாகப் பயிற்சி செய்ய வேணும். நீ அதை விளங்கிக் கொண்டு ஒழுங்காய் கடுமையாகப் பயிற்சி செய்ய வேணும். இப்பிடித் தேவை இல்லாத காரணங்கள் சொல்லிக் கொண்டு இருக்கக்கூடாது. இது நீ உன்னையும் குழப்பி மற்றவையையும் குழப்புகிற மாதிரி இருக்குது. இதால யாருக்கும் நன்மை வரப் போகிறது இல்லை. உனக்காக ஒரு நாளும் கழகமோ அதுகின்ரை கொள்கையோ மாறப் போகிறது இல்லை. நீதான் அதுக்கு ஏத்த மாதிரி மாற வேணும். இல்லாட்டித் தேவையில்லாத சிக்கல்கள் எல்லாம் வரும்’

‘நீ சொல்லுகிற மாதிரிப் பயந்தா நான் இங்கயே செத்துப் போயிடுவன். நான் இங்க சாகிறதுக்கு முதல் என்னால ஆனது அனைத்தையும் செய்து பார்த்திட்டுத்தான் சாவன். அதிலை எந்த மாற்றமும் இருக்காது. சீ நான் ஏன் இங்க வந்தன் எண்டு இருக்குது’

‘இது என்ன கோதாரியடா உன்னோடை. தயவு செய்து எங்களுக்கா ஆவது உந்த எண்ணத்தைக் கைவிடு’

‘உங்களுக்காக நான் சாகவும் தயார். ஆனால் அவங்களிட்டை அடிவாங்கத் தயார் இல்லை. எனக்காக நீங்கள் அவங்களிட்டை அடி வாங்குவியளா? சொல்லு கண்ணன்?’

‘என்னடா விசர் கதை கதைக்கிறா? நாங்கள் ஒழுங்காப் பயிற்சி செய்கிறம். நாங்கள் ஏன் அவங்களிட்டை அடி வாங்க வேணும்?’

‘முடியாதில்லை. நான்தான் எனக்காக அடி வாங்க வேணும் இல்லையா? பிறகு எதுக்கு உந்தச் சமாதானம் எல்லாம்? எனக்காக யாரும் இங்க எதுவும் செய்ய முடியாது. எனக்கான வழியை நான்தான் பார்த்துக் கொள்ள வேணும். தயவு செய்து என்னைக் குழப்பாதையுங்க… நான் எப்பிடியோ இதுக்கு ஒரு வழி கெதியாக் கண்டு பிடிப்பன்’

‘நீ அப்பிடி என்னடா செய்ய முடியும்?’

‘ஏன் வழி இல்லை?’

‘என்ன எண்டு சொல்லு?’

‘அது ஏன் உனக்கு இப்ப?’

‘ஏதும் மொக்குத்தனமாய் செய்து மாட்டுப்படாதை. அப்பிடி மாட்டுப்பட்டா உன்னோடை கூடித் திரிஞ்ச எங்களை முதலில மண்வீட்டில போடுவாங்கள். அதுக்குப் பிறகு உன்னைவிட எங்கடை நிலைமையே மோசமாக இருக்கும். தயவு செய்து அப்பிடி ஏதும் எண்ணம் இருந்தால் அதைக் கனவிலும் திரும்ப நினைக்காதை’

‘அதுக்கு ஒரு வழிதான் இருக்குது’

‘என்ன அது?’

‘எல்லாரும் சேர்ந்து செய்தால்?’

‘சீ நாயே… இப்பிடிக் கதைச்சி எண்டா செவிட்டைப் பொத்தி அறைஞ்சு போடுவன். இனிமேலைக்கு என்னோடை இப்பிடிக் கதைக்காத. எனக்கு விசர் வந்தா நானே போய் அவங்களிட்டை எல்லாத்தையும் சொன்னாலும் சொல்லிப் போடுவன். தயவு செய்து என்னைப் பயித்தியம் ஆக்காத’

‘போய்ச் சொல்லு… எனக்கு எந்தக் கவலையும் இல்லை. இண்டைக்கு நடந்தால் என்ன இன்னும் நாலு நாள் கழிச்சு நடந்தால் என்ன? நான் அதைப் பற்றிக் கவலைப்பட இல்லை. இவங்களிட்டை அடிவாங்கிறதிலும் செத்துப் போயிடலாம். அதால நீ என்ன செய்தாலும் எனக்குப் பிரச்சினை இல்லை’

‘அப்ப உனக்கு யாரைப் பற்றியும் கவலை இல்லை’

‘அப்பிடிக் கவலை இல்லை எண்டா இப்ப நான் இங்க இருந்திருக்க மாட்டன். எனக்குச் சரி எண்டுகிறதை நான் செய்திருப்பன். எனக்கு என்னைப் பற்றிக் கவலை இல்லை எண்டுதான் சொன்னனான்’

‘ஓ எங்களைப் பற்றிக் கவலை இருக்கு எண்டுகிறாய்?’

‘அதுக்காகத்தானே நான் இங்க இருந்து சாகப் போகிறன். அதுக்கு நீங்கள்தானே சாட்சியாக இருக்கப் போகிறியள்? நான் கவலைப்படுகிறதைப் பற்றி நீங்கள் தெரிஞ்சு கொள்ள வேணும் எண்டோ அல்லது அனுதாபம் காட்ட வேணும் எண்டோ நான் நினைக்க இல்லை’

‘என்னடா சொல்லுகிறாய்?’

‘நான் இங்க அடி வாங்கிக் கொண்டு அடிமையாய் பயிற்சி செய்யப் போகிறது இல்லை. அது உங்களுக்கு நல்லாய் தெரியும். என்னால நீங்களும் அடி வாங்கக்கூடாது. அதுக்கு பல வழிகள் இல்லை. நிச்சயம் நான் சொல்லுகிற மாதிரி நீங்கள் ஒரு நாளும் கேட்கப் போகிறதும் இல்லை. அதால என்ரை முடிவையும் யாரும் மாற்ற முடியாது’

‘ஐயோ… நீ குழப்பாதை. இதுக்கு நீ சொல்லுகிறதைவிட நல்ல முடிவு இருக்குது. தயவு செய்து ஒழுங்காப் பயிற்சி செய். ஒருத்தருக்கும் பிரச்சனை இருக்காது. வந்த நோக்கமும் நிறைவேறின மாதிரி இருக்கும். தயவு செய்து வீம்புக்கு அடம்பிடிக்காதை’

‘என்னை விடு கண்ணன். நீ ஒழுங்கா பயிற்சி செய். நான் உன்னை எந்த உதவியும் கேட்க மாட்டன். நீயும் வில்லங்கத்திற்கு வந்து உதவி செய்யாதை. நீ நினைக்கிற மாதிரி என்னை விட்டு விலகி இருக்கிறதுதான் உங்களுக்குப் பிரச்சினை வராமல் இருக்கிறதுக்கு வழி. கவலைப்படாத கண்ணன். எனக்கு உங்களில எந்தக் கோபமோ, வெறுப்போ கிடையாது. எப்பவும் எனக்கு என் கண்ணன் என் கண்ணன்தான். அதிலை எந்த மாற்றமும் இல்லை’

‘டே சுமன்… நீயும் எனக்கு அப்படித்தான். தயவு செய்து அவங்கள் சொல்லுகிறபடி கேட்டுப் பயிற்சியை ஒழுங்காச் செய்யடா? தயவு செய்து அடம்பிடிக்காத. அதால எந்தப் பிரயோசனமும் இல்லை. உயிரைக் கொடுத்துப் பயிற்சியைச் செய்யடா. நீ பயிற்சி செய்தாய் எண்டா யாருக்கும் எந்தப் பிரச்சினையும் இருக்காது’

‘என்னால பயிற்சி செய்ய முடிஞ்சாச் செய்வன். இல்லை எண்டா நீங்கள் எனக்காகக் கவலைப்பட்டுக் கொண்டு தேடி வரவேண்டாம். நீ சொல்லுகிற மாதிரி அது உங்களைத் தேவையில்லாத பிரச்சனையில் மாட்டிவிடும். என்னை நான் பார்த்துக் கொள்கிறன். நீங்கள் கவலைப்படாமல் இருங்க’

‘உன்னோடை கதைக்க முடியாது. அவங்கள் தேடி வந்திடுவாங்கள். வா போவம்’

‘சரி’

அதன் பின்பு சுமன் எதுவும் கதைக்கவில்லை. கண்ணனுக்கும் எதுவும் கேட்க வேண்டும் என்கின்ற ஆவல் இருக்கவில்லை. கேட்டாலும் சுற்றிச் சுற்றி ஒன்றையே கதைப்பான் என்பதும் விளங்கியது. அதனால் மௌனம் கனகராசி என்றே அவன் மனதில் பட்டது.

அமைதியாகவே இருவரும் வாய்க்காலுக்குச் சென்று தங்கள் அலுவல்களை முடித்துக் கொண்டு திரும்பி முகாமிற்கு வந்தார்கள். காவலில் நின்ற தென்னவன் இருவரையும் எதற்காகவோ உற்றுப் பார்த்தான். அந்தப் பார்வையில் ஏன் இவ்வளவு நேரம் என்று கேட்பது போல இருந்தது. அதற்கும் சில காரணங்கள் உண்டு. இங்கும் தெரிந்தும் தெரியாது சில புறநடையான சோடிகள் உண்டு. அவர்கள் சவுக்கம் தோப்புக்குள் தங்கள் ஆவலைத் தீர்த்துக் கொள்வதும் உண்டு.

கை எழுத்துப் போடும் போதுதான் அதிக நேரம் செலவு செய்துவிட்டது கண்ணனுக்கு உறைத்தது. கண்ணன் அதற்குமேல் அங்கு நிற்காது முகாமை நோக்கி விரைந்தான். இனி நித்திரை கொள்வதற்கு அதிக நேரம் இல்லை. விடிந்ததும் தேநீர் பருகிவிட்டு பயிற்சிக்குச் செல்ல வேண்டி இருக்கும் என்பது அவனுக்கு விளங்கியது.

காலைப் பயிற்சிக்கு வீளை ஊதியதும் எழுந்து கண்ணன் சுமனை எழுப்பினான். அவன் எழ மறுத்தான்.

'வாடா ஒண்டாப் போய் பயிற்சி செய்வம். அவங்கள் நெருக்கினால் நாங்களாவது ஏதாவது சொல்லிச் சமாளிக்கலாம். நீ தனியப் போய் மாட்டுப்படாதை. எழும்பி எங்களோடை வா. அதுதான் உனக்குப் பாதுகாப்பு. எங்களுக்கும் நிம்மதி' என்று கேட்டான்.

'தேவையில்லைக் கண்ணன். நீ தோழர் சிவத்தோடை போம். நான் வாறன். என்னைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம்'

'என்னடா கதைக்கிறா சுமன்?'

'நான் என்ன கதைக்கிறன் எண்டு தெரிஞ்சுதான் கதைக்கிறன் கண்ணன். தயவு செய்து நீ போ. நான் கெதியா வாறன்'

'இல்லை. ஒண்டாப் போனம் எண்டாத்தான் ஒண்டா நிண்டு பயிற்சி செய்யலாம். அதுதான் நீ எங்களோடை வாறது முக்கியம்'

'அது தேவை இல்லை. நான் வந்து உங்களோடை சேருகிறன். அப்ப எனக்காக நீங்கள் அடிவாங்க றெடியா?' என்று  கூறிவிட்டு அவன் சிரித்தான்.

அந்தச் சிரிப்பில் அவன் பழைய உயிர்ப்பு அற்றுப் பிணக்களை தோன்றியது போலக் கண்ணனுக்கு இருந்தது. அதைக் கண்ணன் சுமனிடம் சொல்லவில்லை. அவனோடு தொடர்ந்து கதைப்பதில் எந்தவித பிரயோசனமும் இல்லை என்று தோன்றியது. அதனால் அவன் மைதானத்தை நோக்கிப் போகும் தோழர்களோடு சேர்ந்து கொண்டான். அவன் கால்கள் நடந்தாலும் மனது சுமனைவிட்டுப் பிரிய முடியாது அங்கேயே நின்றது. இதற்கு என்ன வழி? இவனை எப்படிக் காப்பாற்றுவது? அவனுக்கு எதுவும் விளங்கவில்லை.

# 8.

தொடர்ந்த சோதனை

ஆற்று நீர் ஓடும் போது அதன் துளிகள் அதன் ஓட்டத்தைத் தடுப்பதில்லை. அதைப் போன்றே முகாமில் இருக்கும் ஒவ்வொரு தோழர்களின் அன்றாட வாழ்க்கையும் இருக்க வேண்டும். ஒரு தோழரின் எந்த நடவடிக்கையும் கழகத்தின் இயக்கத்திற்கு எந்த விதத்திலும் பங்கம் விளைவிப்பதாக இருக்கக் கூடாது. அப்படி இயக்கத்தின் ஓட்டத்திற்குப் பங்கமாக யாரும் பொதுவாக நடந்து கொள்வதில்லை. அதற்கு விதிவிலக்காக சுமன் இருப்பது கண்ணனுக்குச் சங்கடத்தையும் மனவருத்தத்தையும் தந்தது. அவனை அந்த மனவோட்டத்திலிருந்து விடுவித்து விடலாம் என்கின்ற எண்ணத்தில் அவன் செய்த முயற்சிகள் அனைத்தும் தோல்வி அடைந்ததில் அவனுக்குக் கவலையாகவும் வேதனையாகவும் இருந்தது. அவன் மனது முழுவதும் சுமனைச் சுற்றிவரக் கால்கள் மைதானத்தை நோக்கி நடந்தன.

மைதானத்தில் இறங்கிய பின்பு சுமனை நினைக்கும் அவகாசங்கள் கண்ணனுக்குக் கிடைக்கவில்லை. இப்போதாவது தனது நிலைமையை உணர்ந்து இருப்பான் என்கின்ற ஒரு நம்பிக்கையில் கண்ணன் பயிற்சியைக் கவனித்தான். இன்று பயிற்சி வழமையைவிடக் கடுமையாக இருந்தது. காலம் செல்லச் செல்ல பயிற்சி கடுமையாக இருக்கும் என்று ஏற்கனவே கண்ணன் கேள்விப்பட்டு இருந்தான். அது உண்மையாக இருக்கிறது என்பதைக் கண்ணன் அன்றைய பயிற்சியில் கண்டு கொண்டான். அதன் மூர்க்கத்தில் அவனால் அதிகம் சிந்திக்க முடியவில்லை. இருந்தும் மின்னல் போல அவன் நினைவு வந்து போயிற்று. கண்கள் அத்தினை தோழர்களையும் துழாவியது. இருந்தும் அவன் கண்ணில்படவில்லை. நிச்சயம் எங்காவது பயிற்சி செய்வான் என்பதைக் கண்ணன் நம்பினான். அவனுக்கு அதைவிட வேறு வழி இருக்கவில்லை.

காலைப் பயிற்சிகள் ஒருவாறு முடிவடைந்தன. இறுதியாக முகாமிற்குச் செல்லும் நேரம் வந்தது. அத்தால் கண்ணன் முழுமூச்சாகச் சுமனைத் தேடி வலம் வந்தான். இன்றும் வழமை போல அவனைக் காண முடியவில்லை. அவனைக் காண முடியவில்லை என்பதால் கண்ணனுக்குச் சற்றுப் பயம் உண்டாகியது. இன்றும் அப்படி நடந்து இருக்குமோ என்கின்ற எண்ணம் வந்த போது உடல் குளிர்ந்து மயக்கம் வந்துவிடுமோ என்பதாக ஒரு அவஸ்தை சில கணங்கள் உண்டாகின. அப்படி இருக்காது என்று அவன் தனக்குத் தானே சமாதானம் சொல்லிய வண்ணம் முகாமை நோக்கி ஓடத் தொடங்கினான். அலுத்துப்போய் நடந்து வந்த தோழர்கள் கண்ணன் வேகமெடுத்து முகாமை நோக்கி ஓடுவதை விசித்திரமாகப் பார்த்தார்கள். அவர்கள் பார்ப்பது பற்றி அவன் கவலைப்படவில்லை. அவன் தனது வேகத்தைச் சற்றும் குறைக்காது முகாமை நோக்கி ஓடினான்.

ஓடி வந்த கண்ணன் சற்றும் தாமதியாமல் விரைவாக தங்கள் குடிலுக்குச் சென்று அங்கே சுமன் இருக்கிறானா என்று பார்த்தான். அங்கு வேறு சில தோழர்கள் ஏற்கனவே வந்து இருந்தார்கள். ஆனால் சுமனைக் காணவில்லை. கண்ணன் அவர்களிடம் சுமனைப் பற்றிக் கேட்டான். அவர்கள் அதற்குத் தங்களுக்கு அவனைப் பற்றித் தெரியாது என்று கூறிவிட்டார்கள். கண்ணன் அதற்கு மேல் அங்கு நிற்கவில்லை. அவன் மனது பதைபதைத்தது. அப்படி இருக்கக் கூடாது என்று கழகத்தின் கொள்கையையும் மீறி இரகசியமாக இறைவனை வேண்டிக் கொண்டான். பின்பு தாமதியாது வருத்தக்காரர்கள் தங்கும் முகாமை நோக்கி ஓடினான். வழியில் தோழர் சிவம் அவனை இடைமறித்தார். அவரிடம் விடையத்தைக் கூற அவரும் அவனோடு சேர்ந்து வருத்தக்காரர்கள் தங்கும் முகாமிற்கு வந்தார்.

கண்ணனுக்கு மனது பதைபதைத்தது. இங்குச் சுமனைக் காணக் கூடாதே என்பது அவன் அவாவாக இருந்தது. தோழர் சிவத்திற்கும் அதே கவலையாக இருந்தது. தொடர்ந்தும் சுமன் இந்த நிலைமைக்குள் அகப்படுவது தோழர் சிவத்திற்குக் கவலையையும், மனவருத்தத்தையும் தந்தது.

இருவரும் அவசரமாக மருத்துவ முகாமிற்குள் சென்றார்கள். இவர்கள் அவசரமாக வருவதை மருத்துவர் ரவி பார்த்துக் கொண்டு நின்றார். அவருக்கு இவர்கள் இப்படி விழுந்தடித்துக் கொண்டு வருவது பிடிப்பதில்லை. ஒரு விபத்தில் சிக்கிக் காயப்பட்டிருந்தால் இப்படி வருவதில் அர்த்தம் இருந்து இருக்கும் என்பது அவர் எண்ணம்.

இவனோ பயிற்சிக்குக் கள்ளமடித்ததால் அடி வாங்கி வந்து இருக்கிறான். அவனை தியாகி போல இவர்கள் அவசரமாகப் பார்க்க வருவது அவனுக்குக் கோபத்தை உண்டு பண்ணியது. தோழர் சிவத்தை அவனுக்கு ஏற்கனவே தெரியும். அவர் அனுபவம் உள்ள நீண்டகாலத் தோழர் என்பதால் அவரை அவமதிக்க அவனால் முடிவதில்லை. கண்ணன் ஒரு பொருட்டாக இல்லை என்றாலும் தோழர் சிவத்தோடு வரும்போது அவனைமட்டும் கடுமையாகச் சாட முடியாத அவஸ்தை தோழர் ரவிக்கு. தோழர் சிவம் உள்ளே சென்று,

'ரவி… சுமன்?'

'ஓ…' என்று கண்ணால் காட்டினான்.

'என்ன நடந்தது?'

'எனக்கு என்ன தெரியும் தோழர்? வந்தவரைப் பார்த்தன். இடக்கையில சாதுவா வெடிப்பு இருக்குமோ எண்டு ஒரு ஐமிச்சம். மட்டை வைச்சுக் கட்டி இருக்கிறன். வீக்கம் தொடர்ந்து இருந்தால் தஞ்சாவூருக்கு அனுப்ப வேணும். மாறீடும் எண்டு நினைக்கிறன். தோழர் ஒழுங்காப் பயிற்சியைச் செய்திருக்கலாம்தானே? அதை ஒழுங்காச் செய்யாமல் எதுக்கு இவர் இப்பிடி அடி வாங்குகிறார்? பிறகேன் இங்க இயக்கத்துக்கு வந்தவர்?'

'அவை அவையின்ரை பிரச்சனை அவை அவைக்கு. நாங்கள் எப்பிடி அதை முழுமையா உணரமுடியும்? பயிற்சி செய்ய முடிஞ்சால் ஏன் இப்படி அடி வாங்கிறான் எண்டும் யோசிச்சுப் பார்க்கலாம் தானே? ஏதோ அவனால முடியாமல் இருக்கலாம். அதை எல்லாராலும் விளங்கிக் கொள்ள முடியாது எண்டு நினைக்கிறன்'

'ம்… நீங்கள் சொல்லுகிறதிலையும் ஒரு அர்த்தம் இருக்குது. பயிற்சிக்கு எண்டு வந்தால் உயிரைக் கொடுத்தும் அதைச் செய்ய வேணும் என்டு நான் நினைக்கிறன். பயிற்சிதானே முக்கியம். அதையே செய்யாமல் விட்டால் அவங்கள் எப்பிடி விடுவாங்கள்?'

'சரி தோழர் ரவி. எங்களுக்கும் விளங்குது. நாங்கள் இதைப் பற்றிப் பிறகு கதைப்பம். இப்ப தோழர் சுமனோடை கதைக்கலாமே?'

'ம்… கதையுங்க'

சுமன் கண்ணனையும் தோழர் சிவத்தையும் கண்டவுடன் தேம்பித் தேம்பி அழுதான். அவனைப் பார்க்கக் கண்ணனுக்கும் தோழர் சிவத்திற்கும் பரிதாபமாக இருந்தது. அவனது முதுகில் தடவிய வண்ணம் அவனைத் தன்னோடு கண்ணன் அணைத்துக் கொண்டான். அப்படி இருந்தும் அவன் தொடர்ந்தும் தேம்பித் தேம்பி அழுதான்.

'அழுகிறதை நிப்பாட்டும் தோழர் சுமன். நீங்கள் என்ன குழந்தைப் பிள்ளையா? நீங்களே உங்கடை இந்த நிலைமையை மாத்த வேணும். வேறை யாரும் அதுக்கு ஒண்டும் செய்ய முடியாது' என்றார் தோழர் சிவம்.

'என்னால முடியல்லத் தோழர். முடிஞ்சால் நான் செய்யாமலா இருப்பன். என்னை வேறை எதுக்காவது விடச் சொல்லிக் கேட்டுப் பாக்கிறீங்களா தோழர்? எனக்குக் கேட்கச் சங்கடமாய் இருக்குது'

'அதையும் நீங்கள் கேட்கிறதுதான் சரியாய் இருக்கும் தோழர். நான் கேட்டா அதுக்கு என்ன சொல்லுவினமோ தெரியாது. நான் முயற்சி செய்கிறன். நீங்களும் பொறுப்பாளரிட்டை கேட்க முயற்சி செய்யுங்க… இல்லாட்டி நீ யார் இடையில தரகர் எண்டு கேட்டாலும் கேட்பினமோ தெரியாது'

'எனக்குக் கை வலி தாங்க முடியுதில்லை. குறையவிட்டிப் பொறுப்பாளர் இருக்கேக்க போய் கேட்கிறன்'

'அது புத்திசாலித்தனமான வேலை'

'கண்ணன் நீயும் கேட்கிறியா?'

'அதேதான்… நான் கேட்டா உனக்கு வாய் இல்லையோ எண்டு கேட்டாலும் கேட்பினம். எதுக்கும் முயற்சி செய்து நீயே கேள். அதுதான் நான் நல்லது எண்டு நினைக்கிறன். தோழர் சிவம் நீங்கள் என்ன சொல்லுகிறியள்?'

'தோழர் கண்ணன் நீங்கள் சொல்லுகிறது சரி. எதுக்கும் தோழர் சுமன் முதலில கேட்கிறதுதான் புத்தி. அதில ஏதும் சிக்கல் வந்தால் பிறகு கதைச்சுப் பார்க்கலாம்'

'சுமன் உது நல்ல மாற்றம்' என்றான் கண்ணன்.

‘அப்பிடி இல்லை. என்னால யாரும் நேரடியாகப் பாதிக்கப்படக் கூடாது எண்டு நினைக்கிறன்’

‘சரி… எதுவெண்டாலும் நன்மையா முடிஞ்சால் சரி’

‘சரி… அப்ப நாங்கள் வெளிக்கிடுவம் தோழர். சுமன் கையைப் பார்த்துக் கொள்ளும். இரவைக்கு வந்து பார்க்க இயலும் எண்டா வந்து பார்க்கிறம். ரவி சுமன்ரை கைக்குப் பெரிய பிரச்சினை ஒண்டும் இல்லைத் தானே?’

‘அது தெரியாது தோழர். பின்னேரம் அல்லது இரவைக்குத்தான் சரியாய் தெரியும். அப்பிடி வீக்கம் வத்தாட்டி நாளைக்கு வாற வண்டியில ஒரத்தநாடு அனுப்பி வைப்பன். பிறகு அவை தஞ்சாவூருக்கு அனுப்பி வைப்பினம். அங்க மெடிக்கல் கொலேஜ்சில வைத்தியம் பார்ப்பாங்கள்’

‘ஓ அப்பிடியே தோழர்’

‘ம்… எதுக்கும் வெயிற் பண்ணித்தான் பார்க்க வேணும்’

‘சரி. தாங்ஸ் தோழர். அப்ப நாங்கள் வாறம்’

‘சரி’

கண்ணனும் எழுந்தான். சுமன் ஏக்கத்தோடு பார்த்தான். ஆனாலும் தொடர்ந்து அவனோடு இருக்க முடியாது. வந்த காரியத்தை ஒரு கணம்கூட மறவாது செய்து முடிக்க வேண்டும். அதிலிருந்து சற்றும் தவறுவதாகக் கண்ணனுக்கோ தோழர் சிவத்திற்கோ எந்த எண்ணமும் இருக்கவில்லை.

# 9.

மருத்துவக் கல்லுரி

அடுத்த நாள் காலைப் பயிற்சி முடிந்து வந்ததும் வராததுமாய் கண்ணன் அவசரமாக மருத்துவ முகாமிற்குச் சென்றான். அவன் புறப்பட்ட வேகத்தைப் பார்த்த தோழர் சிவமும் அலுப்புப் பாராமல் அவன் பின்னே சென்றார். மருத்துவ முகாமில் இவர்கள் வருவதை ரவி புன்னகையோடு பார்த்துக் கொண்டு நின்றான். அவன் அப்படி நின்றதில் சிலவேளை சுமனிற்கு நன்கு குணமாகி இருக்குமோ என்கின்ற நம்பிக்கை ஏற்பட்டது. என்றாலும் அதை ரவியின் வாயால் கேட்டாலே உண்மை துலங்கும் என்பது விளங்கியது.

'என்ன ரவி? எப்பிடி இருக்குது சுமனுக்கு?"

'ஓ... அவரை காலைமை வந்த வண்டியில ஒரத்தநாட்டிற்கு அனுப்பி வைச்சாச்சுது. கை வீக்கம் குறைய இல்லை. எலும்பு வெடிச்சதோடை இரத்தக் கசிவும் இருக்கலாம் எண்ட ஐமிச்சம். அதுதான் அனுப்பி வைச்சாச்சுது. இங்க கிடந்து அடி வேண்டுகிறதிலும் இப்படியே போய் ஏதாவது வேற திசையில தன்னை வளர்த்துக் கொள்ளட்டும். அதுக்கு இது வசதியாக இருக்கும். அதிலயாவது பிழைச்சுக் கொண்டான் எண்டாச் சரி தோழர். நான் அவர் மருத்துவக் கல்லூரியில தங்கிறது எண்டா மாற்று உடுப்பு வேணும் எண்டு அவற்ற உடுப்பு வாய்க்கோடை அனுப்பி இருக்கிறன். வாய் இருந்தால் பிழைச்சுக் கொள்வார்' என்றான்.

'என்ன தோழர்? இப்பிடி எண்டாக் காலைமை வந்து பார்த்து இருக்கலாம். அவனைப் பார்க்க முடியாமல் போயிட்டுதே...'

'நானும் முதல்ல ஐமிச்சத்திலதான் இருந்தன். ஆனால் எதுவும் தப்பாக நடக்கக் கூடாது எண்டதால அனுப்ப வேண்டியதாய் போயிட்டுது'

'சரி. அதுவும் நல்லதுதான். வாங்கத் தோழர் நாங்கள் முகாமிற்குப் போவம். அவன் சுகமாகி வந்தால் பார்க்கலாம்'

'ம்...' கண்ணனுக்கு நெருங்கிய நண்பன் ஒருவனை இழந்ததை தாங்க முடியாத சோகம். அதே நேரம் அவன் தற்காலிகமாகத் தப்பித்துக் கொண்டான் என்கின்ற சந்தோசம்.

★

அன்று இரவு சுமன் ஒரத்தநாடு அலுவலகத்தில் தங்கினான். தோழர்களோடு சேர்ந்து சுற்றி இருந்து ரொட்டியும் பருப்பும் சாப்பிட்டான். முகாமில் சமைப்பதைவிட இங்குச் சுவையாகச் சமைத்து இருந்தது மிகவும் பிடித்துக் கொண்டது. சாப்பிட்ட பின்பு துங்குவதற்குப் பாய் கொடுத்தார்கள். யாரோ ஒரு தோழர் போர்த்திப் படுப்பதற்குத் துப்பட்டி ஒன்றும் கொடுத்தார். தலைக்குத் தனது பையை தலையணைபோலப் பௌத்திரமாக வைத்துக்கொண்டான். பக்கத்தில் அழுக்கு நீர் தங்கி நிற்கும் இடம் இருந்தது. அதனால் நுளம்புத் தொல்லை இருந்தது. அது ஒரு பக்கம் என்றால் யோசனை மறுபக்கம் அவனைப் போட்டுப் புரட்டி எடுத்தது.

சுமனிற்கு மீண்டும் முகாமிற்குத் திரும்பிப் போவதற்குச் சற்றும் விருப்பம் இல்லை. 'இப்போது கண்ணனும் தோழர் சிவமும் அருகில் இல்லை, என்ன செய்தாலும் அவர்கள் மேல் பழியோ அல்லது சந்தேகமோ உண்டாகாது. ஆனால் இந்த அலுவலகத்திலிருந்து தப்ப முடியாது. அது மிகவும் ஆபத்து. இங்கே ஊனில் புழு நெளிவது போல அதிக எண்ணிக்கையில் தோழர்கள் எங்கும். இங்கு இருந்து தப்பி முதலில் தஞ்சாவூருக்கே போக வேண்டி இருக்கும். அதற்குள் அங்குத் தேடத் தொடங்கி விடுவார்கள். இங்கு எதுவும் தெரியாத அப்பாவியாக இருக்க வேண்டும். தஞ்சாவூருக்கு முதலில் போக வேண்டும். அதன் பின்பு எப்படித் தப்பிப்பது என்று யோசிக்கலாம். தப்பிக்க வேண்டும். இனி முகாமிற்குத் திரும்பிப் போகக்கூடாது. தப்பிப்பதில் கவனமாக இருக்க வேண்டும். மீண்டும் பிடிபட்டால் அடித்தே கொல்வார்கள் என்பது நிச்சயம். அப்படிப் பிடிபடும் சந்தர்ப்பம் வந்தால் எப்படியாவது தற்கொலை செய்து கொள்ள வேண்டும். எந்தப் பிரச்சனையும் இல்லாது தப்பிக்க வேண்டும். தப்பித்து எப்படியாவது இங்கிருந்து மற்றாஸ் போக வேண்டும். அங்கே கவனமாக யாரோடாவது தப்பி இருக்க வேண்டும். மற்றாஸ் எப்படிச் செல்வது என்பதற்கான பொருளாதாரம் அவனிடம் இருந்தது. துணிப்பையின் இரகசியச் சட்டைப்பையில் ஒளித்து வைத்திருந்த அந்த மெல்லிய தங்க மோதிரம் இன்னும் பௌத்திரமாக இருக்கிறதா என்பதை கழிவறைக்கு

சென்றபோது பரிசோதித்துவிட்டான். தஞ்சாவூரில் கவனமாகச் செயற்பட வேண்டும். நிச்சயம் முடியும். அமைதியாகப் படுக்க வேண்டும். யாருக்கும் எந்தச் சந்தேகமும் வராது நடந்து கொள்ள வேண்டும்'

என்று பலவாறு எண்ணி எண்ணிப் புரண்டவனை நித்திரை அதிக நேரம் ஏமாற்றியது. கை வேறு சுண்டிச் சுண்டி வலித்தது. கடைசியாகத் தோழர்களிடம் கேட்டு வேதனை தணிய அவர்கள் கொடுத்த ஏதோ மாத்திரையை நம்பிக்கையோடு விழுங்கிவிட்டுப் படுத்தான். அதன் உதவியுடனும் இருந்த அலுப்பிலும் அந்த நுளம்புக் கடியையும் தாண்டி அவன் நித்திரையாகிப் போய்விட்டான். காலைத் தோழர் ஒருவர் உலுக்கி எழுப்பினார். சுமன் என்ன என்பதை ஊகிக்க முடியாது திகைப்பதைப் பார்த்துவிட்டு,

'என்ன தோழர்?' என்றான்.
'நீங்கள் தஞ்சாவூருக்குப் போக வேணும்'
'அதுக்கு என்ன தோழர்?'
'வண்டி வரப்போகுது. கெதியா எழும்பி வெளிக்கிடுங்க...'
'ஓ... தாங்ஸ் தோழர்'

சுமனுக்கு அலுப்பாக இருந்தது. இன்னும் சிறிது நேரம் படுத்து இருக்கலாம் போல அலுப்பு. இருந்தாலும் அவனது தற்போதைய இலட்சியத்திற்கு அது தடையானது என்பதை அவன் விளங்கிக் கொண்டான். அதனால் மெதுவாக முதலில் எழுந்து அமர்ந்தான். கைகளை முறித்துத் தனது முழிப்பை உறுதி செய்து கொண்டு எழுந்தான்.

காலைக்கடன் முடித்துவிட்டுச் சாப்பிடலாம் என்று எண்ணிய போது வண்டி வந்துவிட்டது. காலைச் சாப்பாடும் தயாராக இருக்கவில்லை. அதனால் அன்று காலைச் சாப்பாடு சாப்பிடாமலே சுமனும், குமரன் என்கின்ற யோண்டிஸ் வருத்தக் காரரும் வண்டியில் ஏறினார்கள். வண்டி தஞ்சாவூருக்குப் பொருட்கள் எடுக்கச் செல்வதால் அதில் அழைத்துச் சென்றார்கள். தஞ்சாவூரில் ஸ்ராலின் என்கின்ற தோழர் சந்தித்து அழைத்துச் செல்வார் என்பது சுமனுக்கு முதலில் தெரியாது. வண்டியிலேயே நேரடியாக மருத்துவமனைக்கு அழைத்துச் செல்வார்கள் என்றே எண்ணி இருந்தான். வண்டி தஞ்சையின் செழிப்பையும் தணல் தழுவிய காற்றையும் கிழித்துக் கொண்டு தஞ்சாவூர் நோக்கிச் சென்றது. அந்த அழகில் இயற்கையின் இரசனையில் சுமனுக்குக் கை நோ கனவிலும் மறந்து போய்விட்டது. அந்த இரசிப்பில் ஆழ்ந்திருந்ததால் நேரம் சட்டென மாயமாகியது. யோண்டிஸ் வருத்தக்காரர் சுமனுக்குக் கை கொடுத்துச் சிரித்துவிட்டு அவரும் இயற்கையை இரசித்தார்.

வண்டி கிராமங்களைப் புறந்தள்ளி நகருக்குள் புகுந்தது. அதன் வேகமும் குறைந்து கொண்டே சென்றது. இறுதியாக வண்டி தஞ்சாவூரில் ஒரு விடுதியின் முன்பு நின்றது. அந்த விடுதியின் முன்பு ஸ்ராலின் என்கின்ற தோழர் இவர்களுக்காகக் காத்து நின்றார். வண்டி நின்றதும் சாரதி வந்து இவர்களை இறங்குமாறு கூறினார். இறங்கிய பின்பு இவர்களை அழைத்துக் கொண்டு ஸ்ராலினிடம் சென்றார். ஸ்ராலின் சாரதியோடு சிறிது நேரம் கதைத்துக் கொண்டு நின்றார். அதைப் பார்க்கும் போது சாரதிக்கும் ஸ்ராலினுக்கும் நல்ல பழக்கம் இருக்கும் போலவே தோன்றியது. அவர்கள் கதைத்து முடிந்த பின்பு வண்டி புறப்பட்டது. வண்டி புறப்பட்டதும் ஸ்ராலின் இவர்களை நோக்கி வந்தார். வந்தவர்,

'அப்ப நாங்கள் வெளிக்கிடுவமே?' என்றார்.
'வெளிக்கிடலாம் தோழர். காலைமை நாங்கள் சாப்பிடேல்ல. சாப்பிடாமலே கூட்டிக் கொண்டு வந்திட்டார். இப்ப தாகமாகவும், பசியாகவும் இருக்குது. ஏதாவது சாப்பிட முடியுமா?'
'ஓ சாப்பிட வேணுமா?'
'சாப்பிட்டா நல்லாய் இருக்கும் தோழர்' என்று அவரோடு கதைத்துச் சம்மதிக்க வைத்தார் அந்த யோண்டிஸ் தோழர்.

'சரி வாங்க தோழர்...' என்று அதன் பின்பு மூவரும் சென்று முன்னே இருந்த விடுதியில் இட்லி சாப்பிட்டார்கள். அது யாழ்ப்பாணத்தில் கண்டிராத புதுமையான சுவை. சாப்பிட்ட பின்பு தாமதியாது தோழர் ஸ்ராலினோடு மருத்துவக் கல்லுரிக்குப் புறப்பட்டார்கள்.

மருத்துவக் கல்லுரிக்கு அருகில் ஒரு அறை கழகத்தால் வாடகைக்கு எடுக்கப்பட்டு இருந்தது. அதில் ஸ்ராலினோடு மருத்துவம் பார்க்க வருபவர்களும் தங்கிக் கொள்வார்கள். மருத்துவக் கல்லுரியில் ஸ்ராலினை விடுதலைப்புலி என்று மட்டுமே தெரிந்து இருந்தது. அப்போது தமிழகத்தில் அனைத்துப் போராளிகளும் அவர்களுக்கு விடுதலைப்புலிகளே. அதற்குள் இருந்த பிரிவுகள் பற்றி அவர்கள் கவலைப்பட்டதே இல்லை. தமிழகத்தில் அப்போது விடுதலைப்புலிகள் என்பதற்காகவே பல சலுகைகள் இருந்தன. இங்கேயும் அந்தச் சலுகை தவறாது இருந்தது. யோன்டிஸ் வருத்தமாய் இருந்த தோழரைச் சோதித்து மருந்து முதலில் எழுதிக் கொடுத்தார்கள். சுமனை இன்று எக்ஸ்றே எடுத்துவிட்டு நாளை வருமாறு கூறி இருந்தார்கள். அதனால் மீண்டும் திரும்பி மருத்துவக் கல்லுரிக்கு அருகிலிருந்த அறையில் சுமனைத் தங்குமாறு கூறிவிட்டு, மற்றைய தோழரை அழைத்துக் கொண்டு பேருந்தில் அவரை ஓரத்தநாடு அனுப்புவதற்கு ஸ்ராலின் சென்றார். அவர்கள் சென்றதால் கிடைத்த தனிமையும் சுதந்திரமும் சுமனுக்கு ஒருவித அதிசயமாக இருந்தது. இப்படித் தனித்து விடுவார்கள் என்று அவன் நினைத்தே இருக்கவில்லை. இதைவிட்டால் இப்படி ஒரு சந்தர்ப்பம் ஒருபோதும் வராது என்கின்ற உண்மையும் விளங்கியது. சுமன் அவசரமாகப் புறப்பட்டான். கதவைச் சாத்தினான். மோதிரத்தை எடுத்து கையில் அணிந்துகொண்டான். தனது சுதந்திரத்தைப் பெற்றுக்கொள்ள அணிந்த அணிகலனாய் அது அவனுக்குத் தோன்றியது. தெருவில் வந்து நின்று ஏதாவது வாகனங்கள் வருகிறதா என்று பார்த்துக் கொண்டு நின்றான். ஒரு பாரவூர்தி வந்தது. சுமன் யோசிக்கவில்லை. கையை நிறுத்துமாறு காட்டினான். அவன் அதிஸ்ரம் வண்டி நின்றது.

'சார் வண்டி எங்க போகுது? நானும் வரலாமா சார்?'

'வண்டி பாண்டிச்சேரி போகுது. நீங்க பாண்டிச்சேரி வாறீங்களா சார்?'

'இல்லை சார்... நான் மற்றாஸ் போகணும்'

'சரி ஏறுங்க சார். விழுப்புரம் வாங்க. அங்கிட்டு இருந்து மற்றாஸ் போகலாம்'

'நல்லது சார். றெம்ப நன்றி சார்'

வண்டி ஓட்டுபவர் சராசரி உயரம் இருப்பார். ஆனால் ஐயனார் போலப் பயம் தரும் நிறமும் மீசையும் கொண்டவர். இவரைப் பார்த்துவிட்டு நிச்சயமாகப் பெண்கள் மறந்தும் இவர் வண்டியில் ஏறமாட்டார்கள் என்று சுமனுக்குத் தோன்றியது. சுமன் ஏறியதும் வண்டி புறப்பட்டது. சாரதி வண்டியை வேகமாக ஓட்டிய வண்ணம் கதைக்கத் தொடங்கினார்.

'சார் நீங்க கேரளாவா?' என்று தனது முதலாவது கேள்விக் கணையைச் சுமனைத் தடுமாற வைப்பதாகத் தொடுத்தார்.

'இல்லையே... ஏன் கேட்கிறியள்?'

'இல்லை நீங்கள் பேசுகிறது ஒரு மாதிரி இருக்குது சார்'

'இல்லை சார். நான் விடுதலைப்புலி. அவசரமா மற்றாஸ் போகணும். அதுதான் உங்களுடைய உதவி எனக்குத் தேவைப்பட்டது'

'அப்பிடீங்களா...? முதன்முறையா நம்ப வண்டியில ஏறின விடுதலைப்புலி நீங்கள்தான் சார். சிலோன்ல தொடர்ந்தும் கொடுமையா இருக்குதா? நம்மளுக்கு அங்க நடக்கிறதைக் கேள்விப்பட்டாக் கவலையா இருக்கும். கோவம் வரும். வாத்தியாரைத்தான் நம்பி இருக்கிறம் சார். நம்பள் அதைவிட என்ன செய்ய முடியும்?'

'ஆமா சார். அங்க தொடர்ந்தும் பிரச்சினையாகத்தான் இருக்குது. வாத்தியார்தான் உதவ வேணும்'

வண்டி தஞ்சாவூரைப் பின் தள்ளி விழுப்புரம் நோக்கிப் பயணித்தது. சுமனுக்குத் தற்போது மிகவும் நிம்மதியாக இருந்தது. என்றாலும் இந்தியாவில் இருக்கும் வரைக்கும் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். விழுப்புரத்தில் தாமதியாது சென்னை சென்றுவிட வேண்டும் என்று மனதிற்குள் எண்ணிக் கொண்டான். எப்படி என்பது

தொடர்ந்தும் அவனுக்கு விளங்கவில்லை. அவன் கையில் பணம் இல்லை. பணம் இல்லாது பேருந்தில் பயணிக்க முடியாது. தொடர்ந்தும் அவன் பாரவூர்தியை நம்ப வேண்டும். அது சிலவேளை ஆபத்தில் முடியலாம். கையில் ஒரு மோதிரம் இருக்கிறது. அதை விற்றால் பணம் வரும் என்பது அவனுக்குத் தெரியும். இருந்தாலும் எப்படி விற்பது, எங்கே விற்பது என்பது அவனுக்கு விளங்கவில்லை.

'என்ன சார் அமைதியாகீட்டியள்?'

'ஒண்டும் இல்லை சார். ஊர் நினைவுகள்...'

'உங்களுக்கு அப்பா அம்மா இருக்கிறாங்களா?'

'இருக்கிறாங்கள் சார்'

'அவங்களை யார் பார்த்துக் கொள்ளுவாங்க? பாவம் இல்லையா சார்?'

'பாவம்தான் சார். நாட்டிற்காக நாங்கள் வெளிக்கிட வேண்டியதாகீட்டுது. அவங்கடை நினைவு அடிக்கடி வருகுது'

'நீங்க விரைவா வெற்றி பெறணும். உங்க அப்பா அம்மாவோடை விரைவாகச் சேர்ந்து வாழ வேணும். எல்லாம் நல்லபடியா நடக்க வேணும் எண்டு கடவுளைப் பிராத்திக்கிறன் சார்'

'றெம்ப நன்றி சார். உங்களைப் போல நல்ல இதயம் உள்ள மனிசர்கள் இருக்கிறவரை எங்கடை போராட்டம் வெற்றி பெறாமல் விடமாட்டுது. திரும்பவும் தாங்ஸ் சார்'

'நாம எல்லாம் ஒரே இனம். நாமளே உதவி செய்யாமல் நம்பிக்கை வைக்காமல் வேற யார் செய்ய முடியும் சார்? ஈழத்தமிழருக்காய் பலகோடி உறவுகள் தமிழ்நாட்டில இருக்கிறம் சார். நாங்கள் எப்பவும் குரல் கொடுப்பம். உங்களுக்காகப் போராடுவம் சார்'

'உங்க அன்புக்கு எப்பிடி நன்றி சொல்லுகிறது எண்டே எனக்குத் தெரிய இல்லைச் சார். இந்த ஆதரவுதான் எங்களை வெற்றிபெற வைக்கும்'

'இது எங்கடை கடைமை சார். ரீ சாப்பிடுவமா சார்?'

'இல்லைப் பருவாய் இல்லை'

'ஒரு விடுதலைப்புலிக்கு ரீ வாங்கிக்கொடுத்த பாக்கியத்தை எனக்குத் தாங்க சார்'

சுமனிற்குப் தேநீர் அருந்தப் பணம் இல்லையே என்கின்ற ஏக்கம் மாறியது. ஓ... இப்பிடியும் மனிதர்கள் இருப்பார்களா என்கின்ற மலைப்பு உண்டாகியது. தேநீர் அருந்த வேண்டும் என்கின்ற தவனம் அவனிடம் நீண்ட நேரமாக இருந்தது. ஆனால் கையில் பணம் இல்லாததால் அதை யாருக்கும் தெரியாது அடக்கி வைத்திருந்தான். அந்த அவஸ்தைக்கு இப்போது விடை கிடைத்ததாக அவனுக்குத் தோன்றியது.

'உங்க அன்பை மறுக்க முடியுமா? சரி வாங்க போவம்'

இருவரும் இறங்கி அந்தத் தேநீர்க்கடையை நோக்கிச் சென்றார்கள். அவர் தேநீரோடு விட்டுவிடவில்லை. அத்தோடு சாம்பார் வடையும் வாங்கிக் கொடுத்தார். சுமன் எதுவும் சொல்லவில்லை. அவனுக்குப் பசிக்கத் தொடங்கி இருந்தது. அவன் கூச்சத்தைவிட்டுச் சுவைத்துச் சாப்பிட்டான். சாப்பிட்டு முடியவும் சாரதி பீடி பற்றினார். சுமனுக்கும் வேண்டுமா என்று கேட்டார். சுமன் அதற்கு வேண்டாம் என்று மரியாதையாகக் கூறிவிட்டு நின்றான். வண்டி மீண்டும் புறப்பட்டது.

'உங்களுக்கு அலுப்பா இருந்தாப் படுங்க சார். நான் விழுப்புரம் வந்த உடன உங்களை எழுப்பி விடுகிறன்'

'ஓ றெம்பத் தாங்ஸ் சார்'

சுமனுக்குக் குற்ற உணர்வாய் இருந்தது. இயக்கத்தைவிட்டு ஓடுவது தெரிந்தால் இவர் இப்படி உதவி செய்வாரா என்பது அவனுக்கு விளங்கவில்லை. விடுதலைப் புலிகள் என்கின்ற இந்தச் சிகரமான நம்பிக்கை ஒருநாள் நொறுங்கிப் போய்விடும். அன்று இவர்களே எங்களை அடித்துக் கலைத்தாலும் வியப்படைவதற்கு ஒன்றும் இல்லை. அது நடப்பதற்கு முன்பு இங்கு இருந்து வெளியேறிவிட வேண்டும். விழுப்புரத்தில் என்ன செய்வது என்று

யோசிக்க வேண்டும். அங்கிருந்து எப்படி மற்றாஸ் செல்வது என்பதைக் கண்டு பிடிக்க வேண்டும். மோதிரத்தை விற்றால் பிரச்சினை இல்லை. மற்றாஸ் சென்றுவிட்டால் கொழும்பிற்குத் தொடர்பு கொள்ளலாம். அப்படித் தொடர்பு கொண்டால் மண்ணடியில் பணம் எடுக்கலாம். அதன் பின்பு கவனமாக இருந்து இப்படியே எங்காவது சென்றுவிட்டால் சரி. இந்த விபரீதமான வெளியேற்றத்திற்கு அது முற்றுப் புள்ளியாக இருக்கும். எல்லாம் நல்லபடியாக நடக்க வேண்டும். இறைவன் அதற்கு அருள் புரிய வேண்டும்.

'ஏன்ன... சார் துக்கம் வரலையா?'

'இல்லை சும்மா யோசினை'

'சரி... சரி...'

என்ன நடந்தது என்று தெரியாது. சிறிது நேரத்தில் சுமன் தன்னை மறந்து கண்ணயர்ந்து போய்விட்டான். விழுப்புரம் வந்ததும் சாரதி அவனை எழுப்பினார். மாலை ஆறுமணி போல இருந்தது. விழுப்புரம் வந்துவிட்டதாக அவனிடம் கூறினார். சுமன் மீண்டும் மீண்டும் நன்றி கூறிவிட்டு இறங்கினான். சுமனக்குத் தனது கையில் இருக்கும் மோதிரத்தை விற்பதற்கு உண்மையில் விருப்பம் இருக்கவில்லை. இருந்தாலும் வேறு வழி இல்லை என்பது அவனுக்கு நன்கு விளங்கியது. அதனால் அவன் நகைக் கடை ஒன்றிற்குள் சென்றான். தனது விரலிலிருந்த மோதிரத்தைக் காட்டி இதை விற்க வேண்டும் என்று கூறினான். அவன் விரலிலேயே இருந்ததினால் அவர்களுக்கு நம்பிக்கையீனம் ஏற்படவில்லை. கழற்றித் தருமாறு கேட்டார்கள். சுமன் கழற்றிக் கொடுத்தான். உரைத்துப் பார்த்துவிட்டு இரண்டாயிரம் ரூபாய் தரலாம் என்றார்கள்.

'போட்டுத் தாங்க சார்' என்றான் சுமன்.

'கட்டுபடியாகாது சார். நூறு ரூபா போட்டுத் தரலாம்' என்றனர்.

'சரி தாங்க சார்'

அவர்கள் பணத்தை எண்ணிக் கொடுத்தார்கள். சுமன் வாங்கிக் கொண்டு மற்றாசிற்கு செல்லும் பேருந்தை நோக்கிச் சென்றான்.

# 10.

அகப்பட்ட அபலைகள்

முகாமின் பிரதான வாயிலுக்கு அருகாமையில் ஒரு குடிலிருந்தது. அதில் ஒரு மனிதனைச் சமுக விரோதி என்று கூட்டி வந்து அடித்துச் சித்திரவதை செய்தார்கள். யார் சமுக விரோதிகள்? அதை யார் எப்படித் தீர்மானிப்பது? அந்தச் சமுக விரோதி என்று குற்றம் சாட்டப்பட்டவர் இன்று என்ன ஆனார் என்பது யாருக்கும் தெரியாது. அதற்குள் தான் இன்று கண்ணனையும் தோழர் சிவத்தையும் வாயில் சீலை அடைந்து, கை, கால் கட்டிச் சித்திரவதை செய்தார்கள். அவர்களிடம் கேட்கப்பட்ட கேள்வி தோழர் சுமன் எங்கே சென்றார் என்பது மட்டுமே. அவன் மருத்துவமனைக்குச் சென்றான் என்பது மட்டுமே அவர்களுக்குத் தெரியும். அதையே அவர்கள் மீண்டும் மீண்டும் கூறினார்கள். சுமன் மருத்துவமனையிலிருந்து எங்கே போனான் என்பது அவர்கள் இருவருக்கும் தெரியாது என்பதை அந்தக் குள்ள மனிதனும், தடித்த சிவந்த குண்டு மனிதனும் நம்ப மறுத்தனர். இவர்கள் கழகத்தின் துப்பறியும் பிரிவின் முக்கியமானவர்கள். மனிதரைக் கொடுமையாகச் சித்திரவதை செய்வதால் துப்பறிந்து கொள்ளலாம் என்பதை நம்புபவர்கள். நல்ல வேளையாகத் தோழர் சிவத்தையும், கண்ணனையும் சித்திரவதை செய்யத் தற்போது கொட்டான் தடிகள் மட்டுமே பாவித்தார்கள். அதைவிடப் பல கொடுமையான சித்திரவதைகள் நடப்பதாகக் கேள்விப்பட்டது உண்டு. ஆனால் அதைத் தோழர் சிவமோ, கண்ணனோ நேரே பார்த்தது இல்லை. கொட்டான் தடிகளை வைத்து ஓடியவர்களை மைதானத்தில் ஓடவிட்டு மிருகத்தனமாய் தாக்குவதை பொதுவாக அனைத்துத் தோழர்களும் பார்த்து இருக்கின்றார்கள். அடித்து முறித்துவிட்டு வைத்தியம் பார்ப்பது அதைவிடக் கொடுமை. அதை உதவி என்கிறார்கள். அதன் தாற்பரியம் சிவத்திற்கு விளங்கவில்லை. தோழர் சிவத்தைப் பொறுத்தவரை இவர்கள் மனிதரே அல்ல... நினைவுகள் அறும்படி கொட்டான் தடியால் தாக்கும் சித்திரவதை தொடர்ந்தது. கண்ணனுக்கு ஒரு அடி விழுந்தால் தோழர் சிவத்திற்கு பத்து அடி என்கின்ற விகிதத்தில் அது இருந்தது. கண்ணனுக்கு அது ஏன் என்று கேட்க முடியாது. வாய் கட்டப்பட்டு இருந்தது முதல் காரணம் என்றால் கேட்டால் பதில் அல்ல அடி மட்டுமே விழும் என்பது மறு காரணம். இந்தச் சித்திரவதைகள் இரவு பன்னிரண்டு மணிக்குப் பின்பு தொடங்கும். அப்போது முகாமில் மற்றைய தோழர்கள் உறங்கி விடுவார்கள். தோழர்களை நிறுத்தி வைத்தே ஓடியவர்களுக்கு வெளிப்படையாகத் தண்டனை கொடுப்பார்கள்.

கண்ணனும் தோழர் சிவமும் ஓடவில்லை. ஆனால் ஓடிய சுமனுக்கு உதவி இருப்பார்கள் என்கின்ற சந்தேகம். ஒரத்தநாட்டுச் சவுக்கம் தோப்பிற்குள் தோழர்களோடு தோழராக இருக்கும் இவர்கள் எப்படித் தஞ்சாவூர் நகரத்திலிருந்த சுமனிற்கு உதவி செய்திருக்க முடியும் என்கின்ற அடிப்படை பூகோள இடைவெளிகூட அவர்களுக்கு விளங்கவில்லை. இயக்கங்கள் என்பதில் கலவரத்திற்குப் பின்பு தோழர்கள் என்பவர்கள் எந்தத் தகுதியும் இன்றி எழுந்த மானமாக உள்வாங்கப்பட்டவர்களே. அதற்கான ஒரே ஒரு முதல் முக்கிய தகுதி அவர்கள் தமிழர்களாய் பிறந்து இருக்க வேண்டும். சிங்கள இராணுவத்திற்கு அவர்கள் சிங்களவராய் இருப்பது எவ்வளவு முக்கியமோ அதுபோல இயக்கங்களுக்கும் தமிழராய் இருப்பது மிகவும் முக்கிய தகமை. அதையும் தாண்டி ஒருசிலர் புறநடையாக இருந்தார்கள். தமிழ் இராணுவங்களின் ஆரம்பக் கொள்கைகள் வேறாக இருந்து இருக்கலாம். ஆனால் தோழர் சிவமும் கண்ணனும் பார்க்கும் தற்போதைய நடைமுறை இதுவாகவே இருந்தது. இதனால் இயக்கத்திற்குள் நிறையக் குற்றவாளிகள், குண்டர்கள், எந்தக் கொள்கையும் அற்ற ஆயுதத்தில் மோகம் கொண்ட வன்முறையாளர்கள் என்பதாக எந்த வரையறையும் அற்று அங்கத்தினர் உள்வாங்கப்பட்டார்கள். அவர்களே கழகத்தின் நிர்வாகத்திலும், துப்பறிவும் பிரிவு போன்ற முக்கிய பதவிகளிலும் அங்கத்துவம் வகித்தனர். அப்படி வந்தவர்களிடம் எப்படி மனிதாபிமானத்தை எதிர்பார்க்க முடியும்? தோழர் சிவத்திற்கும் கண்ணனுக்குமான சித்திரவதை விடியும் வரை நடந்தது. அது பல நாட்கள் தொடர்ந்தது.

★

சில காலத்தின் பின் கண்ணனை வருத்தக்காரரின் குடிலில் போட்டு வைத்தியம் செய்தார்கள். தோழர் சிவத்தை இருட்டறைக்குள் போட்டிருக்கிறார்கள் என்று கண்ணன் கேள்விப்பட்டான். ஆனால் அவன் இயக்கத்திலிருந்து வெளியேறும் வரைக்கும் சிவத்தை மீண்டும் உயிரோடு கண்டதே இல்லை. யாரும் கண்டதாக அவனிடம் கூறியதும் இல்லை.

கண்ணன் இயக்கம் செயலிழந்த பின்பு மற்றாஸ் சென்றான். பல மாதங்களின் பின்பு கனடாவிலிருந்த சுமனோடு தொடர்பு கிடைத்தது. அவன் உதவியதால் டென்மார்க் சென்றான்.

--முற்றும்--

பின்குறிப்பு:

இன்று கண்ணனும் சுமனும் ஆயுதமேந்திய எந்தப் போராட்டத்திலும் அல்லது அப்படி நடந்த யுத்தத்திலும் மனித உரிமைகள் மதிக்கப்பட்டதே இல்லை என்பதை வலுவாக நம்புவதோடு, அப்படியான ஆயுதப் போராட்டங்களை முழுமையாக வெறுத்து, அப்படியான போராட்டங்களுக்கு, அல்லது அதைத்துத் துண்டும் விசமிகளுக்கு எதிராகச் செயற்பட்டு வருகிறார்கள். போராட்டம், புரட்சி என்று கூறி மனிதம் வெட்கிக்கும் சித்திரவதைகளையும், மனிதவுரிமை மீறலைச் செய்வதை அல்லது அதை நியாயப்படுத்துவதை மனிதம் மதிக்கும் யாரும் ஏற்கக்கூடாது என்பதே அவர்கள் இன்றைய இறைஞ்சலாகவும் மனமுருகும் வேண்டுகோளாகவும் இருக்கிறது.